

மகாத்மா

# காந்தி

புகழ் பாடும்

புதிய

## கொலம்பியா

ரிகார்டு



கான ஸரஸ்வதி

# D.K.பட்டம்மாள்

பாடிய

GE.6482:

...சாந்தி நிலவவேண்டும்...

கரம்சந்திர மோஹனதாஸ்காந்தி



## ஸரஸ்வதி ஸ்டோர்ஸ், மதராஸ்.2.

மேற்கண்ட ரிகார்டுகள் எங்களிடமும் கிடைக்கும்:

மெஸர்ஸ். குப்தா கார்ப்பரேஷன்

தபால் பெட்டி நெ. 35, 17-A/428, அருணாசல ஆச்சாரி தெரு, சேலம்

குப்தா ஜுவெலர்ஸ் திருவல்லிக்கேணி ஹைரோடு, மதராஸ்

சுரல் குலைக்கட்டிகளுக்கு

ஜம்பியின் "லிவர்க்யூர்"

## அறிவிப்பு

மத்திய மாகாணத்தில் எமது வாடிக்கைக் காரர்களின் தேவையைப் பூர்த்தி செய்யவும், சகலவிதமான சேவைகள் புரியவும் எமது டாக்டர், குழந்தைகளின் சுரல் குலைக் கட்டி நிபுணரின் நிர்வாகப் பொறுப்பில் கீழ்க் கண்ட விலாஸத்தில் எமது கிளை ஸ்தாபனம் திறக்கப் பட்டிருப்பதை மகிழ்ச்சியுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

நெ. 76, மோஹன் நகர்
கலாஸி லைன்ஸ், நாகப்பூர்

●

ஆலோசனை நேரம்:

காலை 8 முதல் 11 மணி வரை
மாலை 4 முதல் 6 மணி வரை
ஞாயிற்றுக்கிழமைகளில்
காலை 8 முதல் 11 மணி வரை மட்டும்

( இதர நேரங்களில் வைத்தியர் உசிதப்படி )

●

ஜம்பி வெங்கடரமணய்யா & சன்ஸ்

மயிலாப்பூர் — மதராஸ்

**Glaxo**

# கிளாக்ஸோ குழந்தைகளை புஷ்டியாக வளர்க்கிறது



## என்னைப்போல!

ஹெச். ஜே. பாஸ்டர் அண்டு கம்பெனி, லிமிடெட்

குழந்தை உணவு கொள்ளுமளவு வளர்ந்த பிறகு அதன் முதல்படி ஆகாரம் "கிளாக்ஸோ"வுடன் "பாரக்ஸ்"

# ஒவ்வொரு தினமும் உங்கள் சருமத்தை



## அதிக அழகுபெறச்செய்யும்

கேடில் கலந்த சோப் ரெக்ஸோனா ஒன்றே. அது உங்கள் சருமத்திற்கு புத்துயிரளிக்கும்: பரிசுத்தத்தையும் புதுப்பொலிவையும் தரும்.

தவறாமல் ரெக்ஸோனா சோப் உபயோகித்து மேனியை சுத்தம் செய்துகொள்ளுங்கள். வெகு சீக்கிரத்திலேயே சருமம் புதுசோபையைப்பெறும். சருமத்தைச் சுத்தம் செய்து, மிருதுவாக்கி, ஆரோக்கியமூட்டும் சக்திவாய்ந்த தைலங்களால் விஞ்ஞான முறைப்படி தயாரிக்கப்பட்ட கலப்பு மருந்து கேடில். இது உங்கள் சருமத்தை அப்பழுக்கற்றதாகவும், இடமாகவும், ஆரோக்கியமுடையதாகவும் செய்ய உதவுவதுடன் எப்பொழுதும் பூரணப் பொலிவுடன் வைத்துக் கொள்கிறது.

கேடில் சேர்ந்த ரெக்ஸோனாதான் இதைச்செய்கிறது!




# ரெக்ஸோனா
# சோப்

RP. 40-172 TM

No 2.

# கல்கி

## பொருளடக்கம்


| மலர் 7 இதழ் 34 | மார்ச் 21 | சர்வசித்து ௵ பங்குனி 8 |
|---|---|---|




"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்களும், சம்பவங்களும் கற்பனை.




மலர் 7 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதி | இதழ் 34

# என்ன சேதி?

## இந்தியா இல்லையா?

இந்திய சர்க்காரின் பிரதம மந்திரி ஜவாஹர்லால்ஜி விசாகப்பட்டினத்தில் 'ஜல உஷா' கப்பல் விழாவுக்கு விஜயம் செய்திருந்தபோது, அந்த விஜயத்தைப் பல ஸ்தாபனங்கள் உபயோகப்படுத்திக் கொண்டன. அதனால் பண்டித ஜவாஹர்லாலின் உணர்ச்சி ததும்பிய பல சொற்பொழிவுகள் நமக்குக் கிடைத்தன. நேரில் கேட்டவர்கள்போக ரேடியோவில் பலர் கேட்டார்கள்; பத்திரிகையிலும் படித்தார்கள்.

சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்ட ஸ்தாபனங்களில் ஆந்திர மாகாண காங்கிரஸ் கமிட்டியும் ஒன்று. ஆந்திர மாகாண காங்கிரஸ் கமிட்டியார் ஜவாஹர்லாலை அழைத்தார்கள்; உபசரித்தார்கள்; உபசாரப் பத்திரம் அளித்தார்கள்; பதில் சொல்லும்படியும் கேட்டார்கள்.

அவ்வளவுதான்: ஜவாஹரின் பதில் வந்தது. "ஜவாஹரின் சாட்டை!" "பிரதம மந்திரி கொடுத்த சவுக்கடி!" "நேரு வெளுத்துத் தள்ளி விட்டார்!" "ஆந்திர மாகாணக் காங்கிரஸுக்கு ஜவாஹர் கொடுத்த சூடு!" என்றெல்லாம் தலைப்புகள் கொடுப்பதற்குத் தகுதியாக அவருடைய பதில் வந்தது.

"உங்களுடைய உபசாரப் பத்திரத்தைப் படித்தால் 'இந்தியா' என்பதாக ஒரு தேசம் இருப்பதாகவே தெரியவில்லையே? இந்தியாவை அடியோடு மறந்து விட்டீர்களா? இந்தியாவின் க்ஷேமத்தில் உங்களுக்கு அக்கறையேயில்லையா? ஆந்திராவைத் தனி ராஜ்யம் ஆக்கப்போகிறீர்களா? ஏன் இவ்வளவு குறுகிய புத்தி கொண்டு விட்டீர்கள்? ஆந்திர மாகாணக் காங்கிரஸ் கமிட்டி இவ்வளவு கேவல நிலைமையை அடைந்து விட்டதே! அடாடா! ஆந்திரர்களுக்கு என்ன வந்து விட்டது?" என்று நேருஜி சக்கைப்போடு போட்டு விட்டார்.

## ஆந்திரம் எதற்கு?

ஜவாஹர்லால்ஜியின் மீது பலர் பல குறைகள் சொல்லலாம். ஆனால் மனதிலுள்ளதை மறைத்து வைத்துக் கொள்ளக் கூடியவர் என்றோ, உள்ளத்தில் ஒன்று எண்ணி வெளியில் ஒன்று சொல்லக் கூடியவர் என்றோ யாரும் அவர் மீது குற்றம் சொல்ல முடியாது. மனதில் எழுந்ததை உடனே வெளியில் கொட்டி விடுகிறவர். கொஞ்சம் யோசித்துச் சொல்லலாம் என்றுகூட இருக்க மாட்டார். ஜவாஹர்லால்ஜி மனதில் நினைப்பதை அவருடைய வாய் பேசிக்கொண்டேயிருக்கும். இரைந்து பேசாத போதும் அவருடைய உதடுகள் படபடவென்று அடித்துக் கொண்டிருக்கும். உள்ளமும் உதடும் அப்படி ஒன்றுபட்ட உண்மையாளர் அவர்.

அத்தகையவரிடம் நம் ஆந்திர காங்கிரஸ் சகோதரர்கள் பெற்ற அத்தாட்சியின் பொருட்டு அவர்களுக்கு நமது அநுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம். அற்ப நோக்கமும் குறுகிய உள்ளமும் தமிழ் நாட்டில் இருந்தாலும் கேவலந்தான்; ஆந்திராவில் இருந்தாலும் கேவலந்தான். கேரளம் மிகச் சிறு நாடாகையால் கேரள நாட்டார் கொஞ்சம் குறுகிய மனப்பான்மை காட்டினால் போனால் போகிறதென்று நாம் அநுதாபப்படலாம். ஆனால் பழைய காலத்து ஆந்திர மகா சாம்ராஜ்யத்துக்கும் பிற்காலத்து விஜயநகர சாம்ராஜ்யத்துக்கும் வாரிசுகளாயுள்ள ஆந்திரர்களுக்குக் குறுகிய நோக்கமும் வீண் ஆத்திரமும் எதற்காக?

இந்தியாவினுடைய பெருமைதான் தங்களுடைய பெருமை, — இந்தியாவினுடைய க்ஷேமந்தான் தங்களுடைய க்ஷேமம் என்பதை எண்ணிப் பார்ப்பதற்கு ஆந்திரர்கள் வெகு தூரம் போக வேண்டியதில்லை. ஆந்திர நாடு இந்திய தேசத்துடன் ஐக்கியப்பட்டிராவிட்டால், இன்று விசாகப் பட்டினத்தில் பல கோடி

ரூபாய் செலவில் கப்பல் கட்டும் தொழிற்சாலை ஸ்தாபிக்கப் பட்டிருக்குமா? இன்னொரு பக்கம் திரும்பினால் நைஜாமின் கபந்த வடிவம் வயிற்றிலே வாயை வைத்துக் கொண்டு இரண்டு கைகளையும் நீள நீட்டிக் கொண்டு 'அபக்காய ஸ்வாஹா' செய்வதற்குக் காத்துக் கொண்டிருக்கிறது. இந்திய சர்க்காரின் உதவியில்லாமல் நைஜாம் கபந்தனின் ஆக்கிரமிப்பைத் தற்சமயம் ஆந்திரர்களால் சமாளிக்க முடியுமா?

சுதந்திர இந்திய சர்க்கார் சென்ற ஆறு மாதத்தில் எவ்வளவோ மகத்தான நெருக்கடிகளையும் இன்னல்களையும் சமாளிக்க வேண்டியிருந்தது. இன்னமும் சுதந்திர இந்தியாவின் முன்னால் மலை போன்ற அபாயங்கள் திரண்டு நிற்கின்றன. எனவே சிலகாலத்துக்கு உண்மையான தேசபக்தர்கள் இந்தியப் பேரரசின் பாதுகாப்பைக் குறித்தே அதிக கவனம் செலுத்த வேண்டும். சிறிய சுயநல மாகாண நல நோக்கங்களைப் பெரிது படுத்தக் கூடாது.

## ராஜாஜி மண்டபம்

பிப்ரவரி மாதம் முதல் வாரத்தில் ஒரு தினப் பத்திரிகையில் பின்வரும் செய்தித் தலைப்பு காணப்பட்டது :—

**சென்னை அரசாங்க மாளிகை விருந்து**

---

**மண்டபத்தில் மகாத்மா அஸ்தி தரிசனம்**

மேற்கண்ட முறையிலேயே வரிகள் அமைந்திருந்தன. பார்ப்பதற்குக் கண்ணை உறுத்தியதோடு விஷயார் மனதிற்கு வேதனை தந்தது. 'பாங்க் வெட்டிங் ஹால்' என்று தமிழில் எழுதுவதும் அச்சிடுவதும் படிப்பதும் சங்கடமாயிருப்பதன் காரணமாக, "விருந்து மண்டபம்" என்று மொழி பெயர்த்ததின் விளைவு மேற்கண்ட விபரீத அர்த்தம் தரும் தலைப்புகளுக்குக் காரணமாயிற்று.

சென்ற டிசம்பர் மாதத்தில் மேற்படி சென்னை சர்க்கார் மாளிகையின் 'பாங்க் வெட்டிங்' ஹாலில் ராஜாஜி ஜயந்தி மிகச் சிறப்பாகக் கொண்டாடப்பட்டது. அச்சமயம் ஸ்ரீ என். எஸ். வரதாச்சாரி இந்த மண்டபத்தின் பெயரை "ராஜாஜி மண்டபம்" என மாற்ற வேண்டுமென்று யோசனை கூறினார். இதைச் சபையோர் உற்சாகத்துடன் ஆமோதித்தார்கள். பிறகு பேசிய மராமத்து இலாகா மந்திரி கனம் பக்தவத்ஸலம் அந்த யோசனையைப் பற்றிக் கவனிப்பதாகச் சொன்னார். அதன்படியே சென்ற வாரத்தில் பாங்க் வெட்டிங் ஹாலின் பெயரை "ராஜாஜி மண்டபம்" என்று மாற்றி விட்டதாகச் சர்க்கார் முடிவு வெளியாயிற்று.

இந்த நல்ல முடிவு குறித்துச் சென்னை மந்திரிமார்களை வாழ்த்துகிறோம். முக்கியமாக, மராமத்து மந்திரி கனம் பக்தவத்ஸலம் அவர்களைப் பாராட்டுகிறோம்.

## லீக் நாடகம்!

இந்திய முஸ்லிம் லீக் சபையிலுள்ள சுமார் நூற்றைம்பது அங்கத்தினரில் சென்னையில் நடந்த லீக் கூட்டத்துக்கு வந்திருந்தவர்கள் முப்பது பேர். அவர்களிலும் எழுவர், லீக் தொடர்ந்து இருக்க வேண்டும் என்பதற்கு விரோதமாக வோட் கொடுத்து விட்டார்கள். அஸ்ஸாம், மேற்கு வங்காளம், கிழக்குப் பாஞ்சாலம், ஒரிஸ்ஸா, பீஹார் இந்த ஏழு மாகாணங்களும் மேற்படி கூட்டத்தை அறவே பகிஷ்காரம் செய்து விட்டன. ஐக்கிய மாகாணத்திலிருந்து தப்பித் தவறி வந்திருந்த ஒருவரும் லீக் தொடர்ந்து இருக்க வேண்டும் என்ற தீர்மானத்துக்கு விரோதமாக வோட்டுக் கொடுத்தார். எனவே நூற்றைம்பது பேர்களில் ஆறில் ஒரு பங்கு பேர்கள் கூட மேற்படி தீர்மானத்துக்குச் சாதகமாக வோட்டுக் கொடுக்கவில்லை. எனினும் "பெரும்பான்மையான" வோட்டுகளால் தீர்மானம் நிறைவேறியதென்று பெயர் செய்து விட்டார்கள்! இப்படியாக ஜனாப் முகமது இஸ்மெயிலின் தலைமையில் இந்திய முஸ்லிம் லீக் நாடகம் நடந்து முடிந்தது.

அந்த நாடகத்துக்குப் பின், சென்னை சட்டசபை முஸ்லிம் லீக் கட்சியைச் சேர்ந்த பலர் அதிலிருந்து ராஜிநாமா செய்து விட்டனர். லீக் இன்னும் கூட வகுப்பு வாதத்தை அடிப்படையாகக் கொண்ட அரசியல் கட்சியாகவே இருந்து வருகிறதென்று கூறி அவர்கள் கட்சியிலிருந்து விலகிக் கொண்டிருக்கிறார்கள். மகாத்மா காந்தியின் மறைவுக்குப் பின்னர் இந்தியாவிலுள்ள பெரும்பாலான முஸ்லிம்களும் வகுப்புவாதத்தின் விபரீதத்தையும் அதைத் தொடர்ந்து வருவதால் ஏற்படும் விளைவுகளையும் அறிந்திருக்கிறார்கள் என்பது, சென்னையில் நடந்த லீக் கூட்டத்தைப் பெரும்பான்மையோர் பகிஷ்கரித்திருப்பதிலிருந்து சந்தேகமின்றித் தெரிகிறது. அப்படியிருக்க ஒரு சிலர் இன்னும் கூட மேற்படி வகுப்பு வாத ஸ்தாபனத்துக்கு உயிர் கொடுத்து வளர்க்க முற்படுவது, காட்டில் மறைந்து வரும் வகுப்புத் துவேஷத்தை மீண்டும் கிளறி ஒற்றுமைக்கு உலை வைப்பதாகும்.

# தண் பொருநையின் பாக்கியம்

திருநெல்வேலி தேசபக்தர்களின் பெரு முயற்சியினால் காந்தி மகானுடைய அஸ்தியின் ஒரு பகுதியைப் பெறும் பாக்கியம் தாமிரபரணி ஆற்றுக்கு கிடைத்தது. அஸ்தி கலசத்தையும் அஸ்தி கைங்கர்யத்தில் ஈடுபட்ட தேசத் தொண்டர்களையும் படத்தில் காணலாம்.



## காந்தி மகான் திருப்புகழ்

காந்தி மகான் காலஞ் சென்றது பற்றிய பெருந் துயரத்தை ஸ்ரீ எம். கே. தியாகராஜ பாகவதர் அவர்களும், ஸ்ரீமதி D. K. பட்டம்மாளும் இரண்டு இசைத் தட்டுகளின் மூலம் வெளியிட்டிருக்கிறார்கள்.

கான சரஸ்வதி பட்டம்மாள் பாடியிருக்கும் பாடல்களின் சாஹித்ய கர்த்தா ஸ்ரீ சேது மாதவராவ். ஒரு பக்கத்தில் ''கரம்சந்த்ர மோகனதாஸ் காந்திஜி! உனைப் போல......'' என்ற தொகையறாவின் பாட்டு ஆரம்பமாகி, 'கொடுமதியாளர் கொடுமைகள் சகித்தாய்'' என்ற இடத்தில் வர்ணமெட்டாக மாறுகிறது. கடைசியில், ''ரகுபதி ராகவ'' என்னும் ராமதுன வரிகளும் பாடப்பட்டிருக்கின்றன.

இன்னொரு பக்கத்தில் ''சாந்தி நிலவ வேண்டும்'' என்று தொடங்கும் பாட்டில் ''கடமையை மறவோம் அவர் கடன் தீர்ப்போம்'' என்ற இடம் வெகு உருக்கமாயிருக்கிறது. காந்திமகான் பத்துக்கோடி ரூபாய் கடன் விட்டு விட்டுப் போயிருந்தாலும் நாமே சம்பாதித்துத் தீர்த்துவிடலாம் என்று தோன்றுகிறது.

ஆனால் ஸ்ரீ எம். கே. தியாகராஜ பாகவதர் தமது பாட்டு ஒன்றைக் ''கைம்மாறு செய்வதுண்டோ?'' என்று ஆரம்பம் செய்கிறார். ''நீண்டகாலப் பேயைக் குழி தோண்டிப் புதைத்தவர்க்குக் கைம்மாறு செய்வதுண்டோ?'' என்று பாடியிருக்கும் சாஹித்ய கர்த்தா பாபநாசம் சிவன் அவர்கள் காந்திஜிக்கு நாம் கைம்மாறு எதுவும் செய்யமுடியாது. அவருடைய கடனை நாம் தீர்க்கவும் முடியாது என்று கருதுவதாகத் தெரிகிறது.

இன்னொரு பக்கத்தில் ஸ்ரீ தியாகராஜ பாகவதரின் குரலுக்கு விசேஷமாய் எடுத்த செஞ்சுருட்டி ராகத்தில் ''காந்தியைப்போல் ஒரு சாந்தகுண ரூபனை'' என்னும் பாடலை உருக்கமாய்ப் பாடியிருக்கிறார். இதுவும் பாபநாசம் சிவனுடைய சாஹித்யமதான்.

தாய்நாட்டுக்காக ஆருயிரை அளித்த காந்தி மகானுக்கு வேறு கைம்மாறு ஒன்றும் நாம் செய்ய முடியாவிட்டாலும், மேற்கூறிய கிராமபோன் இசைத் தட்டுகளை வாங்கிக் கேட்கலாம். கேட்டு உருகலாம்; கண்ணீரும் வடிக்கலாம்.




ருஷ்யாவின் ஸ்டாலினும் அமெரிக்காவின் ட்ருமனும் ஒருவரை யொருவர் "உலகயுத்தத்தை உண்டாக்க முயல்கிறார்" என்று குற்றம்சாட்டுகிறார்கள்

# திரை கடலிலே....!

ஏழு மாதங்களுக்கு முன் ஒரு பிரம்மாண்டமான கப்பல் கரைகாணாத கடலில் புறப்பட்டது!

அது புறப்பட்ட சிறிது நேரத்தில் எங்கிருந்தோ கரு மேகங்கள் வந்து கவிந்து கொண்டன; அகோரமாக மழை பெய்தது; இடியின் சப்தம் எட்டுத் திசைகளையும் கிடுகிடுக்கச் செய்தது; சண்டமாருதத்தினால் கடல் கொந்தளித்தது!

மேற்படி உற்பாதங்கள் எல்லாம் சேர்ந்து கடைசியாக, கப்பலை நிர்மாணித்த கர்த்தாவையே பலிகொண்டு விட்டது!

எனினும் கப்பல் ஆடி அசைந்து கொடுத்து விட்டு, மீண்டும் கம்பீரமாகச் செல்ல ஆரம்பித்ததே யன்றி நின்றுவிடவில்லை, நிலை குலைந்துவிடவில்லை!

வகுப்புக் கலகங்களாகிற சண்டமாருதமோ, லட்சக்கணக்கானவர்கள் சிந்திய உதிர வெள்ளமோ, அகதிகளின் கண்ணீர் பெருக்குடன் கூடிய கூக்குரலின் சப்தமோ, சுதந்திர இந்திய அரசாங்கமாகிற கப்பலுக்கு ஆபத்தை உண்டு பண்ண முடியவில்லை.

இந்திய அரசாங்கக் கப்பல் ஆடி அசைந்து கொடுத்து விட்டு, மீண்டும் காலக் கடலின் கம்பீரமாகச் செல்ல ஆரம்பித்திருக்கிறது!

சரித்திரத்திலே கண்டும் கேட்டுமிராத மேற்படி உற்பாதங்களிலிருந்து தப்பிய அந்தக் கப்பலை, இனி எதுவும் அசைக்க முடியாதென்பது இப்போது உறுதியாகி இருக்கிறது!

* * *

இந்தியா அரசியல் சுதந்திரத்தை இழந்து கிடந்ததால், பொருளாதார சுபிட்சத்துக்கு வழியில்லாமல் இருந்தது.

பொருளாதார சுபிட்சத்துக்கு முக்கிய சாதனமான இந்தியக் கப்பல் தொழில் அன்னியர்களால் நசுக்கப்பட்டதே அதற்குக் காரணம்.

எனினும் பாரத நாட்டிற்கு அரசியல் சுதந்திரம் கிடைத்து விட்டதால், பொருளாதார சுபிட்சத்துக்கும் வழி பிறந்துதான் தீரவேண்டும்.

அதற்கு முக்கிய சாதனமான கப்பல், திரை கடலிலே மீண்டும் கம்பீரமாக ஓட ஆரம்பித்திருக்கிறது!

பாரதத்தாயின் அருந்தவப் புதல்வரும் இந்தியாவின் முடிசூடா மன்னருமான பண்டித ஜவாஹர்லால் நேரு, "ஜல உஷா" என்ற அந்தக் கப்பலின் நாமகரண வைபவத்தையும் வெள்ளோட்ட வைபவத்தையும் விசாகபட்டினம் துறைமுகத்திலே வெகு விமரிசையாக நடத்திவைத்திருக்கிறார்.

இந்திய ஜனங்களுக்காக இந்திய ஜனங்களால் நடத்தப்படும் இந்திய ஜனங்களுடைய சுதந்திர இந்திய அரசாங்கக் கப்பலைப் போலவே, சுதந்திர இந்தியாவின் முதலாவது கப்பலான "ஜல உஷா"வும் இந்தியர்களின் மூலதனத்தைக் கொண்டு இந்தியர்களின் உழைப்பினால் இந்தியர்களின் க்ஷேமத்துக்காக நிர்மாணிக்கப் பெற்றதாகும்.

மேற்படி வைபவத்தின் மூலம் இந்தியாவின் கப்பல் வியாபார சரித்திரத்தில் ஒரு புதிய அத்தியாயம் ஆரம்பமாகியிருக்கிறது!

"மேலைக் கடல் முழுதும் கப்பல் விடுவோம்" என்ற பாரதியாரின் அருள் வாக்கு கீழைக் கடலுக்கும் சேர்த்துப் பலிக்கும் நல்ல காலம் வந்திருக்கிறது!

* * *

பண்டைய இந்தியா பல்வேறு துறைகளிலும் பெருமையுடன் விளங்கியதைப்போல, கப்பல் தொழிலிலும் சிறந்து விளங்கியது.

கப்பல் நிர்மாணத்திலும் கப்பல் வியாபாரத்திலும் இந்தியாவின் இணையற்ற சிறப்பைக் கண்டு வெளி நாட்டு நிபுணர்கள் பிரமித்த காலம் உண்டு.

ஏசுநாதர் அவதாரம் செய்வதற்குப் பல நூற்றாண்டுகளுக்கு முன்பே இந்தியக் கப்பல்கள் ஏழு கடல்களிலும் திக் விஜயம் செய்து வந்தன என்று சரித்திரம் கூறுகிறது.

ஒரு காலத்தில் இந்தியாவின் உற்பத்தியான சாமான்களுடனே இந்தியக் கப்பல்கள் லண்டன் துறைமுகத்துக்குள் பிரவேசித்தபோது, பிரிட்டிஷ் கப்பல் முதலாளிகள் தங்களுடைய தேசமே பறிபோனதுபோல் பதறித் துடித்தார்கள் என்பதும் சரித்திரம் கூறும் உண்மையாகும்.

எனினும், பழம் பெருமைகளைப் பறைசாற்றிக் கொண்டிருப்பதால் எவ்வித பலனும் ஏற்பட்டு விடாது.

இந்தியாவின் கப்பல் தொழில் நசுக்குண்டதால் இந்தியாவுக்கு ஏற்பட்ட நஷ்டம் அளவிட முடியாது. நம் நாட்டில் பஞ்சத்தினால் லட்சக்கணக்கானவர்கள் மடிந்ததற்குக் காரணம் இந்தியர்களுக்குச் சொந்தமாகக் கப்பல் இராததே யாகும்.

அன்னியர்களால் நசுக்கப்பட்ட கப்பல் தொழிலை மீண்டும் நமது நாட்டில் உய்விக்கச் சந்தர்ப்பம் கிடைத்திருப்பதைக் கண்டு நாம் சந்தோஷம் அடையலாம்.

எனினும் மற்ற சுதந்திர நாடுகளுக்குச் சொந்தமாக நூற்றுக்கணக்கான கப்பல்கள் இருக்கும் இக்காலத்தில், சுதந்திர இந்தியாவின் முதல் கப்பல் இப்போதுதான் திரை கடலை நோக்கி யிருக்கிறது என்பதை நாம் மறந்துவிடக்கூடாது.

* * *

புதிய கப்பலின் வெள்ளோட்ட வைபவத்தில் பண்டித ஜவாஹர்லால் நேரு கூறியுள்ள யோசனைகளை சம்பந்தப் பட்டவர்கள் பின்பற்றி நடப்பார்களாயின், கப்பல் தொழிலில் மற்ற நாடுகளுக்குச் சமமாக இந்தியாவும் முன்னேற்றம் அடைவதற்கு அதிக காலம் ஆகாது.

கப்பல்கள் கட்டுவதும், ஓட்டுவதும் எதற்காக?
சில முதலாளிகளின் நன்மைக்காக அல்ல; சர்க்காரின் நன்மைக்காகவும் அல்ல.

தேசத்தின் சுதந்திரத்தைப் பாதுகாக்கவும், தேச மக்களின் சுபிட்ச வாழ்வுக்கு வகை தேடவும் கப்பல் போக்குவரத்து அத்தியாவசியமாகும்.

அந்த லட்சியத்தை முக்கியமாகக் கொண்டு கப்பல்கள் நிர்மாணிக்கப்படுமாயின், அதில் சர்க்கார் தலையிட மாட்டார்கள். இல்லாவிடில் அந்தத் தொழிலைத் தங்களுடைய நிர்வாகத்தில் எடுத்துக்கொள்ள சர்க்கார் சிறிதும் தயங்க மாட்டார்களென்பதை ஜவாஹர்லால்ஜி தெளிவுபடுத்தி யிருக்கிறார்.

மற்றும் கைத்தொழில்களுக்கும் சர்க்காருக்கும் அன்னியோன்னியபாவம் இருந்து வர வேண்டிய என்ற அர்த்தமற்ற கூற்றை நமது தலைவர் கடுமையாகக் கண்டித்திருப்பதை, முக்கியமாக முதலாளிகளும் தொழிலாளிகளும் கவனிக்க வேண்டும்.

கைத்தொழில்கள் இருப்பது கோடானு கோடிக் கணக்கான ஜனங்கள் அடங்கிய தேசத்தின் நன்மைக்காகவே யன்றி, குறிப்பிட்ட பிரிவினரின் நலனுக்காக அல்ல.

தேச நன்மைக்காகவே சர்க்கார் இருக்கின்றனர். கைத்தொழில்கள் சர்க்காருக்குப் போட்டியான ஸ்தாபனங்கள் அல்ல. அப்படியிருக்க, கைத்தொழில்களுக்கும் சர்க்காருக்கும் அன்னியோன்னியபாவம் வேண்டும் என்ற பேச்சை எழுவதற்கு இடமில்லை.

அதாவது கைத்தொழில்களுக்கும் சர்க்காருக்கும் அன்னியோன்னியம் ஏற்பட வேண்டும் என்று கூறுவதைக் காட்டிலும் முதலாளிகளுக்கும் தொழிலாளிகளுக்கும் அன்னியோன்னியம் ஏற்பட வேண்டும் என்று கூறுவது தான் முற்றிலும் சரியாகும்.

கைத்தொழில்கள் பெருகுவதில் சர்க்காருக்குச் சிரத்தையில்லை என்று எவரும் கூற முடியாது.

ஆனால், இன்று தேசத்தின் க்ஷேமத்துக்கு இன்றியமையாத கைத்தொழில்கள் பெருகி உற்பத்தி அதிகரிப்பதற்கு முட்டுக்கட்டையாக இருப்பவை வேலை நிறுத்தங்கள்தான்.

எனவே, வேலை நிறுத்தங்களுக்கு இடம் கொடுக்காமல் முதலாளிகளும் தொழிலாளிகளும் எந்தப் பிரச்னையையும் சமரசமாகவும் சிநேகபாவத்துடனும் தீர்த்துக் கொள்ள வேண்டும் என்பதை, நமது அரும் பெரும் தலைவர் இதற்கு முன் பல தடவைகளிலும் வற்புறுத்தியதுபோல் இப்போதும் வற்புறுத்தி யிருக்கிறார்.

மேற்படி புத்திமதியை கப்பல் தொழிலில் மாத்திரமல்ல, இந்தியாவிலுள்ள சகல கைத்தொழில்களிலும் ஈடுபட்டுள்ள முதலாளிகளும் தொழிலாளிகளும் ஏகோபித்துப் பின்பற்ற வேண்டும்.

நம் தேசத்தின் வருங்கால க்ஷேமம் அதையே பொறுத்திருக்கிறது.

# வ.உ.சி. கப்பல் நிலையம்



விசாகப்பட்டினத்தில் 'ஜல உஷா' கப்பல் கடலில் இறங்கிய விழாவைப் பற்றிப் படித்த போதும் கேட்ட போதும் தமிழர்களுக்கெல்லாம் தேசபக்தர் திரு வ. உ. சிதம்பரம்பிள்ளை அவர்களின் நினைவு அவசியம் ஏற்பட்டிருக்கும். திரு சிதம்பரனார் நாற்பது வருஷத்துக்கு முன்னால் கப்பல் கம்பெனி ஸ்தாபித்துக் கப்பல் ஓட்டிய கதையைச் சிலர் பெருமையுடன் எண்ணியிருப்பார்கள்; சிலர் மகிழ்ச்சியுடன் நினைத்துப் பார்த்திருப்பார்கள். ஆனால் அந்தப் பெருமையில் ஒரு மனக்குறையும் அந்த மகிழ்ச்சியில் ஒரு துயரமும் அவர்களைப் பாதித்திருக்கும்.

வ. உ. சி. கப்பல் விட்ட கதை சோகசத்தில் முடிந்ததை எண்ணி வருந்தியிருப்பார்கள். அத்தகைய வீரத் தமிழருக்கு, தேசபக்த சிங்கத்துக்கு, அவர் பிறந்து வளர்ந்து பேசிப் பழகிக் கப்பல் ஓட்டிச் சிறைப்பட்ட தூத்துக்குடியில் இன்னும் ஒரு தக்க ஞாபகச் சின்னம் ஏற்படவில்லையே என்ற மனக்குறையும் தோன்றியிருக்கும்.

தேசபக்தர் வ. உ. சிதம்பரனாருக்கு எந்தவித ஞாபகச் சின்னம் தகுதியாயிருக்கும்? சந்தேகம் என்ன? விசாகப்பட்டினத்தில் ஸ்தாபிக்கப் பட்டிருப்பது போன்ற ஒரு பெரிய கப்பல் கட்டும் தளந்தான்.

ஒருவேளை இது உடனே சாத்தியப்படாது என்று ஏற்பட்டால், அடுத்த படியாகக் கப்பல் ஓட்டும் இயந்திரக் கலை (மெரைன் என்ஜினியரிங்)யைப் போதிக்கும் ஒரு நிலையமாவது வ. உ. சி. அவர்களின் பெயரால் தூத்துக்குடியில் ஸ்தாபிக்கப்பட வேண்டும்.

மேற்கூறிய இரண்டு காரியங்களும் மிக முக்கியமானவை. நாட்டின் பாதுகாப்புக்கும் வளப் பெருக்கத்துக்கும் இன்றியமையாதனவை.

கப்பல் கட்டும் தளத்துக்குக் கோடிக் கணக்கில் பணம் வேண்டும். கப்பல் பயிற்சி நிலையத்துக்கு லட்சக் கணக்கில் பொருள் வேண்டும்.

பொது மக்களிடம் பணம் வசூலித்து மட்டும் இந்த மகத்தான காரியத்தை நிறைவேற்ற முடியாது.

தமிழ்ப் பெருமக்கள் வ. உ. சி.யிடம் தங்கள் மரியாதையைக் காட்டுவதற்காகக் காணிக்கை செலுத்தவேண்டும். அதற்குமேலே சென்னை சர்க்கார் ஒரு பகுதியும் இந்திய சர்க்கார் இன்னொரு பகுதியும் பணம் கொடுத்து வ. உ. சி. கப்பல் நிலையத்தை நிறுவவேண்டும்.

**தமிழ்ப் பெருமக்கள் பத்து லட்சம் ரூபாயும், சென்னை சர்க்கார் பத்து லட்சம் ரூபாயும், இந்திய சர்க்கார் பத்து லட்சம் ரூபாயும் போட்டுக் கப்பல் பயிற்சி நிலையத்தை ஆரம்பிக்கலாம். முப்பது லட்சம் போதாது என்றால் அதற்கு மேல் வேண்டிய அதிகப்படி தொகையையும் இரண்டு சர்க்கார்களும் சேர்ந்து கொடுக்க வேண்டும்.**

இந்திய சர்க்காரில் பொக்கிஷ மந்திரி பதவியைத் தற்சமயம் ஸ்ரீ ஆர். கே. சண்முகம் செட்டியார் புகழுடன் வகித்து வருகிறார்.

எனவே மேற்கண்ட பெரிய முயற்சியைத் தொடங்குவதற்கு இதுவே சரியான சமயமாகும்.

* * *

இரண்டு வருஷத்துக்கு முன்னால் தூத்துக்குடி நண்பர்கள் ராஜாஜியின் தலைமையில் கூட்டங்கூடி வ. உ. சி. ஞாபகார்த்த நிதி ஆரம்பித்தார்கள். சுமார் 55,000 ரூபாய் சேர்ந்தது. பிறகு நிதி வசூல் நின்று போயிற்று. இதற்கு ஒரு முக்கிய காரணம் எந்தவிதமான ஞாபகச் சின்னம் ஏற்படுத்துவது என்று முடிவு செய்யப்படாததுதான்.

சென்ற 1947-ம் வருஷம் மத்தியில் இது ஒரு விதமாக நிச்சயமாயிற்று. தூத்துக்குடி நண்பர்கள் மேற்படி பணத்தை ஆரம்ப மூலதனமாகக் கொண்டு வ. உ. சி. காலேஜ் ஆரம்

பிக்கலாமென்று தீர்மானித்தார்கள். ஆனால் "நிதி போதாது" "இடம் போதாது" என்ற காரணங்களினால் வ. உ. சி. கலாசாலை தொடங்குவதற்குச் சென்னைச் சர்வகலாசாலையின் அநுமதி கிடைக்கவில்லை.

இதன் பிறகு தூத்துக்குடி நண்பர்கள் மேலும் முயன்று சில நல்ல ஏற்பாடுகள் செய்திருக்கிறார்கள். காலேஜ் கட்டிடத்துக்கு விஸ்தாரமான இடம் பிடித்திருக்கிறார்கள்.

திருவாவடுதுறை ஆதீனம் ஸ்ரீலஸ்ரீ பண்டார சந்நிதி அவர்கள் வ. உ. சி. காலேஜில் ஒரு தனி பிளாக் கட்டுவதற்கு வேண்டிய ஐம்பதினாயிரம் ரூபாய் நன்கொடை தருவதாக வாக்களித்திருக்கிறார்கள்.

எனவே இந்த வருஷம் ஜூன் அல்லது ஜூலை மாதத்தில் தூத்துக்குடியில் வ. உ. சி. கலாசாலை ஆரம்பமாகும் என்று எதிர்பார்க்கலாம்.

* * *

**வ.** உ. சி. அவர்களின் ஞாபகத்தை நிலைநாட்ட ஒரு வெறும் இண்டர்மீடியட் காலேஜ் போதாது என்று சொல்ல வேண்டியதில்லை. அதில் தூத்துக்குடி நண்பர்களும் திருப்தியடைய மாட்டார்கள்; தமிழ் மக்களும் திருப்தியடையமாட்டார்கள்.

வசூலான பணம் வெறுமனே தூங்குவானேன் என்ற எண்ணத்தினாலும், தூத்துக்குடியில் காலேஜ் இல்லாத காரணத்தினாலும் மேற்படி யோசனை செய்யப்பட்டிருக்கிறது.

அதுவரையில் சரி; இப்போது இண்டர்மீடியட் கலாசாலையாக ஆரம்பிப்பது கூடிய சீக்கிரத்தில் கப்பல் கலைப் பயிற்சி அளிக்கும் பெருநிலையமாக மாறவேண்டும். அதற்குத் தமிழ் மக்கள் முயற்சி செய்ய வேண்டும்; கிளர்ச்சியும் செய்யவேண்டும்.

இப்போதுள்ள சென்னை மந்திரிசபையாரால் இந்தக் காரியம் ஒருவேளை முடியவில்லையென்றால், தமிழ்நாடு தனி மாகாணமாகப் பிரிந்ததும் ஏற்படப்போகும் தமிழர் அரசாங்கம் இந்தத் திருப்பணியைத் தங்கள் முதற் கடமையாகக் கருதிச் செய்து முடிப்பார்கள் என்று நம்புகிறோம்.



## புத்தகம் அனுப்புங்கள்

தமிழ் எழுத்தாளரையும், தமிழ்ப் பதிப்பாளரையும் வேண்டிக்கொள்ளுகின்றோம். தமிழ் வளர்ச்சிக் கழகத்தின் சார்பாகக் கேட்டுக்கொள்கிறோம்.

1947-ம் வருஷத்தில் பிரசுரமான தமிழ்ப் புத்தகங்கள் ஒவ்வொன்றிலும் இரண்டு பிரதிகளைத் தயவுசெய்து ஏப்ரல் 15க்குள் அனுப்பி வையுங்கள்.

தமிழ் வளர்ச்சிக் கழகத்தாரின் பரிசுத் திட்டத்துக்காக ஒவ்வொரு புத்தகத்திலும் இரண்டு பிரதிகள் கோரப்படுகின்றன. மற்றும் இரண்டு புத்தகப் பிரதிகள் கழகத்தார் விலை கொடுத்து வாங்கிக் கொள்வார்கள்.

பரிசுத் திட்டத்தைப் பற்றிய விவரங்கள் எல்லாருக்கும் தெரிந்தவையே. தமிழில் வெளியாகக்கூடிய புத்தகங்களைப் பின்வரும் பன்னிரண்டு பகுதிகளாகப் பிரித்திருக்கிறது: 1. கவிதை, இசைப்பாடல்; 2. கட்டுரை, கலை, பிரயாணம், சுயசரிதம்; 3. சிறு கதை; 4. நாவல், நாடகம்; 5. ஆராய்ச்சி, மொழி நூல், சரித்திரம், பழைய இலக்கியம்; 6. விஞ்ஞானம், பௌதிகம், ரசாயனம்; 7. இயற்கை நூல், விவசாயம்; 8. சரித்திரம், பொருளாதாரம், அரசியல், சங்க நூல்; 9. கணிதம், வான சாஸ்திரம், இயந்திர நூல், எஞ்சினியரிங்; 10. குழந்தை இலக்கியம்; 11. கல்வி முறை, தத்துவஞானம், மனோதத்துவம்; 12. வைத்தியம், சுகாதாரம்.

இவற்றில் சென்ற 1946-ம் ஆண்டில் 2. கட்டுரை; 3. சிறுகதை; 4. நாவல்; 5. ஆராய்ச்சி; 6. விஞ்ஞானம்; 8. பொருளாதாரம் என்னும் ஆறு பகுதிகளுக்குப் பரிசுகள் வழங்கப்பட்டன. பாக்கியுள்ள ஆறு பகுதிகளுக்கும் 1947-ம் வருஷத்திற்குப் பரிசு வழங்கப்படும். 1946-ம் ஆண்டில் அனுப்பப்பட்டுப் பரிசு வழங்கப்படாத பகுதிகளுக்குரிய நூல்கள் 1947-ம் வருஷத் திட்டத்தில் சேர்த்துக் கொள்ளப்படும்.

பரிசு வழங்கப்பட்ட நூல்களைத் தவிர, பஞ்சாயத்தாரால் 'சிறந்தவை' என்று பொறுக்கப்படும் புத்தகங்கள் விசேஷ பாராட்டுதலுக்கு உரியவையாகும்.

புத்தகம் அனுப்பவேண்டிய விலாசம்: ஸ்ரீ ம. ப. பெரியசாமி, காரியதரிசி, தமிழ் வளர்ச்சிக் கழகம், ஸ்ரீ ராமகிருஷ்ண வித்யாலயம், கோயமுத்தூர்.

# இசை அரசின் இசைத்தட்டு

திரு எம். எம். தண்டபாணி தேசிகர் எப்படிப்பட்ட மனிதர் என்று யாராவது கேட்டால், "அவர் கனவான்; குணவான்; பக்திமான்; சங்கீத வித்வான்" என்றெல்லாம் இதுவரை சொல்லிக் கொண்டிருந்தோம். இனி அவரைப் "பாக்கியவான்" என்றும் சொல்லவேண்டுமென இப்போது தெரிந்து கொண்டோம்.

கனிவும் கம்பீரமும் நன்றாக அமைந்த தேசிகரின் குரல் பக்திப் பாடல்களுக்கு மிகவும் பொருந்தியது. அதிலும் தெய்வத் தமிழ் மொழியிலுள்ள அற்புதமான பக்திப் பாடல்களுக்கு மெத்தப் பொருந்தியது. அத்தகைய குரலில் தேசிகர் தேவாரம், திருவாசகம், திருவிளையாடற் சிந்து, பிள்ளைத் தமிழ், நந்தன் சரித்திரம், பட்டினத்தார் பாடல் ஆகியவற்றைக் காதலாகிக் கசிந்துருகிப் பாடும்போது கேட்பவர்களின் கண்களில் கண்ணீர் மல்காமலிராது.

நெடுகாலமாகத் திரு தேசிகர் அவர்கள் தெலுங்கு, தமிழ் ஆகிய இரு மொழிகளிலும் சிறந்த கீர்த்தனங்களைக் கற்று கிரமங்கள், ஸ்வரங்கள் முதலியவற்றோடு கர்நாடக பாணியில் பாடிப் புகழ்பெற்று வருகிறார்.

இதனால் ஒருவேளை நல்ல தமிழ்ப் பண்பு வாய்ந்த நாட்டுப் பாடல்களை அவரிடம் கேட்பது அருமையாகி விடுமோ என்று தமிழன்பர்கள் சிலர் சந்தேகப்படத் தொடங்கிய சமயத்தில், அதைத் தீர்த்து வைக்கும் படியான அரிய இசைத்தட்டு ஒன்று வெளியாகி யிருக்கிறது.




இந்த இசைத்தட்டின் ஒரு பக்கத்தில் நாஞ்சில் நாட்டுக் கவிமணி ஸ்ரீ தேசிக விநாயகம் பிள்ளை அவர்களின் பாடலும், இன்னொரு பக்கத்தில் நாமக்கல் கவிஞர் ஸ்ரீ ராமலிங்கம் பிள்ளை அவர்களின் பாடலும் பாடப் பட்டிருக்கின்றன.

மகாகவி பாரதியாரின் பாடல்களைப் பற்றி ஒரு பட்டிக்காட்டான் பாடுவதுபோல் அமைந்த கவிமணி தேசிக விநாயகம் பிள்ளையின் பாடலை அறியாத தமிழர் அநேகமாக யாரும் இரார். "பாட்டுக்கொரு புலவன் பாரதியடா!" என்று தொடங்கி, பாரதியார் பாடல்களில் உள்ள சிறப்புக்களை உணர்ச்சி ததும்பக் கவிமணி பாடியிருக்கிறார். சொல் லுக்குச் சொல் அழகேறும் இந்தப் பாடலைக் கேட்டால் கல்லும் கனிந்து கனியாகும் என்று சொல்லவே தோன்றும். அவ்வளவு அழகிய அந்தப் பாட்டை, பாடலின் கருத்துக்குப் பொருத்தமாக நாட்டுப் பாடலெனத் தொனிக்கும் இனிய மெட்டு அமைத்து இதயத்திலே பிருந்து பொங்கிவரும் ஆர்வத்தோடு ஸ்ரீ தேசிகர் இந்த எச். எம். வி. இசைத்தட்டில் பாடி யிருக்கிறார்.

மற்றொரு பக்கத்தில் உள்ள நாமக்கல் கவிஞர் பாட்டு, "நல்ல சமயமடா!" என்று ஆரம்பமாகிறது. காந்தி மகான் உயிரோடிருந்து தேசத்துக்கு வழி காட்டியபோது அவரிடம் அளவிலாத பக்திகொண்ட காந்தியக் கவிஞர் பாடிய பாடல் இது. ஆயினும்,

"காந்தியைப்போல் தலைவர்—எந்தக்
காலத்தில் கிட்டுமடா!"

என்னும் வரிகள் இப்போது மகாத்மா காலமாகிவிட்ட காலத்துக்கும் பொருத்தமாயிருப்பதால், அந்த வரிகளை இசையோடு சேர்த்துக் கேட்கும்போது உள்ளம் உருகி விடுகிறது.

தமிழுக்கும் தமிழிசைக்கும் ஸ்ரீ தண்டபாணி தேசிகர் செய்து வரும் தொண்டு மகத்தானது. இருபெரும் தமிழ்க் கவிஞர்களின் பாடல்களை இந்த இசைத் தட்டில் பாடியுள்ள தன் மூலம் இசையரசு ஸ்ரீ எம். எம். தண்டபாணி தேசிகர் அவர்களின் இசை மேலும் ஒரு படி ஓங்கி நிற்கிறது.



மேலே:—தியாகராஜ நகரில் நாளது மார்ச் 13உ. சனிக்கிழமை சங்கீத கலாநிதி செம்மங்குடி சீனிவாசய்யர் தலைமையில் ஸ்ரீமதி ருக்மணி தேவி 'சத்குரு சங்கீத வித்யா சாலை'யைத் திறந்து வைத்தார்.

கீழே:—மேற்படி புதிய சங்கீத பாடசாலையில் வீணை தனம்மாளின் பேத்திகளான ஸ்ரீமதிகள் முக்தா, பிருந்தா, அபிராமசுந்தரி ஆகியவர்கள் சங்கீதம் கற்பிப்பார்கள்.

# மாந்தருக்குள் ஒரு தெய்வம்

## 15. வழியில் நேர்ந்த விபத்து

தாதா அப்துல்லா சேத் மிக்க முன் ஜாக்கிரதை யுள்ளவர். பாரிஸ்டர் காந்தி பிரிடோரியாவுக்குப் போகத் தயார் என்று தெரிவித்ததும் பிரயாணத்துக்கு ஏற்பாடு செய்தார். பிறகு காந்திஜியைப் பார்த்து, "பிரிட்டோரியாவில் எங்கே தங்குவீர்?" என்று கேட்டார்.

"எங்கே தங்கும்படி சொல்கிறீர்களோ, அங்கே தங்குகிறேன்" என்றார் காந்திஜி.

"சரி; உமக்கு ஜாகை ஏற்படுத்திக் கொடுக்கும்படி அங்கேயுள்ள நம்முடைய வக்கீலுக்கு எழுதுகிறேன். இன்னும் சில நண்பர்களுக்கும் உம்மைப் பற்றி எழுதுகிறேன். ஆனால் அவர்களில் யாரோடும் நீர் தங்கவேண்டாம். நம் எதிராளிக்குப் பிரிட்டோரியாவில் அதிக செல்வாக்கு உண்டு. நம்முடைய கடிதங்கள் எல்லாம் அந்தரங்கமாக இருக்க வேண்டும். யாராவது நம் கடிதங்களைப் படிக்க நேர்ந்து விட்டால் நமக்குப் பெருந் தீங்கு விளையும்!" என்று அப்துல்லா சேத் எச்சரித்தார்.

அதற்குப் பாரிஸ்டர் மோகன் தாஸ் கூறியதாவது:— "நமது வக்கீல் ஏற்படுத்தும் ஜாகையிலேயே தங்குகிறேன். அல்லது நானே இடம் தேடிக் கொள்கிறேன். ஆனால் ஒரு விஷயத்தில் தாங்கள் நிம்மதியாக இருங்கள். நமக்குள் அந்தரங்கமான விஷயம் வேறு யாருக்கும் தெரியவராது. எதிர்க்கட்சியாரையும் பழக்கம் செய்து கொள்ளலாம் என்றே எண்ணியிருக்கிறேன். கூடுமானால், நம்முடைய வழக்கைக் கோர்ட்டுக்கு வெளியில் ராஜியாகத் தீர்த்துக் கொள்ளப் பிரயத்தனம் செய்வேன். பார்க்கப் போனால், பிரதிவாதி தங்களுடைய உறவினர்தானே?"

வழக்கில் பிரதிவாதியின் பெயர் சேத் தயேப் ஹாஜி கான் முகம்மது என்றும், அவர் அப்துல்லா சேத்தின் நெருங்கிய உறவினர் என்றும் காந்திஜி தெரிந்து கொண்டிருந்தார். இவர்கள் ஒருவருக்கொருவர் வழக்குத் தொடுத்துக்கொண்டிருப்பது எவ்வளவு வீணான காரியம் என்று அவருக்குத் தோன்றியது. இந்தியர்கள் எல்லாரையும் அலட்சியமாகவும் அவமதிப்போடும் பார்க்கும் வெள்ளைக்காரர்களுக்கு மத்தியில் வாழ்ந்து கொண்டே இந்தியர்கள் ஒருவரோடொருவர் சண்டை பிடித்துக் கொண்டிருப்பதின் முறைகேடு காந்திஜியின் உள்ளத்தை உறுத்தியது.

'ராஜி' என்னும் வார்த்தையைக் கேட்டதும் அப்துல்லா சேத் சிறிது திடுக்கிட்டார். ஆனால் காந்திஜியைப் பற்றி அவருடைய அபிப்பிராயம் இந்தச் சில நாளைக்குள்ளேயே மாறிப்போயிருந்தது. அவரிடம் நன்மதிப்பு ஏற்பட்டிருந்தது. ஆகவே, அப்துல்லா சேத் கூறியதாவது:—"ஆம், ஆம்! கோர்ட்டுக்கு வெளியே வழக்குத் தீர்ந்துவிட்டால் நல்லதுதான். ஆனால் தயாப் சேத் இலேசில் ராஜிக்கு வரும் மனிதர் அல்ல. நம்முடைய இரகசியங்களை அறிந்து கொண்டு நம்மைக் கவிழ்த்து விடப் பார்ப்பார். ஆகையால் நீர் சர்வ ஜாக்கிரதையாயிருக்க வேண்டும். எந்தக் காரியத்தையும் ஒரு முறைக்கு இரண்டு முறை யோசித்துச் செய்ய வேண்டும்."

"தாங்கள் சிறிதும் கவலைப்பட வேண்டாம். வழக்கு விவரங்களைப் பற்றி நான் தயேப் சேத்திடமாவது அல்லது வேறு யாரிடமாவது ஒருநாளும் பேசமாட்டேன். ராஜி செய்து கொண்டு விடுவது நல்லது

என்று மட்டும் பொதுப்படையாக யோசனை கூறுவேன்" என்றார் பாரிஸ்டர் காந்தி.

இதற்கு அப்துல்லா சேத் ஆட்சேபம் சொல்லவில்லை. பிரயாணத்துக்கு ஏற்பாடு செய்யப்பட்டது. காந்திஜி ரயிலில் முதல் வகுப்பு டிக்கட் வாங்கிக் கொண்டார். தென்னாப்பிரிக்கா ரயில்களில் முதல் வகுப்புப் பிரயாணிகளாயிருந்தாலும் இரவில் படுக்கை 'சப்ளை'க்காகத் தனியாக ஐந்து ஷில்லிங் கொடுத்து டிக்கட் வாங்க வேணுமாம். இதையும் வாங்கிவிடும்படி அப்துல்லா சேத் சொன்னார். ஆனால் காந்திஜி அவ்விதம் வீண் செலவு செய்ய விரும்பவில்லை. அப்துல்லா சேத் மறுபடியும், "இங்கே பாரும்! இது இந்தியா தேசம் அன்று. முன் ஜாக்கிரதை அவசியம். ஆண்டவன் புண்ணியத்தில் நமக்குப் பணக் கஷ்டம் கிடையாது. ஆசையால் சிக்கனம் செய்ய எண்ணி வீண் கஷ்டங்களை விலைக்கு வாங்கிக் கொள்ள வேண்டாம்" என்றார்.

"ரொம்ப வந்தனம்; என்னுடைய காரியங்களை நானே பார்த்துக் கொள்வேன். தாங்கள் என்னைப்பற்றிக் கவலைப்படாதிருந்தால் போதும்!" என்றார் மோகன் தாஸ்.

* * *

தாதா அப்துல்லா சேத்தின் யோசனைப்படி செய்யாததின் பலனை விரைவிலேயே மோகன் தாஸ் உணரும்படி நேரிட்டது. நேட்டாலின் தலை நகரமாகிய மேரிட்ஸ்பர்க்குக்கு இரவு 9 மணிக்கு ரயில் போய்ச் சேர்ந்தது. இந்த ஸ்டேஷனில் பிரயாணிகளுக்குப் படுக்கை கொடுக்கப் படுவது வழக்கம். ஒரு ரயில்வே ஊழியர் வந்து, "படுக்கை வேண்டுமா?" என்று காந்திஜியைக் கேட்டார். "வேண்டாம்; என்னிடம் படுக்கை இருக்கிறது!" என்று காந்திஜி விடையளித்தார். அந்த ஊழியர் சென்ற பிறகு, வெள்ளைக்காரப் பிரயாணி ஒருவர் வந்து, காந்திஜியை மேலும் கீழும் உற்றுப் பார்த்தார். கறுப்பு மனிதர் ஒருவர் முதல் வகுப்பு ரயிலில் உட்கார்ந்திருந்ததைப் பார்த்ததும் அவருடைய மனம் பெரும் சங்கடத்துக்கு ஆளாகி விட்டது போலும்! அவர் போய் இரண்டு ரயில்வே உத்தியோகஸ்தர்களை அழைத்துக் கொண்டு வந்து சேர்ந்தார். எல்லாரும் மோகன் தாஸை உற்றுப் பார்த்துக் கொண்டு நின்றார்கள். கடைசியில் இன்னொரு மூன்றாவது உத்தியோகஸ்தர் வந்து, "கீழே இறங்கு; சாமான் ஏற்றும் வண்டியில் போய் ஏறிக்கொள்!" என்றார்.

"என்னிடம் முதல் வகுப்பு ரயில் டிக்கட் இருக்கிறது, ஐயா!" என்று காந்திஜி மரியாதையாகச் சொன்னார்.

"அக்கறையில்லை; நீ போய்ச் சாமான் வண்டியிலேதான் ஏறிக்கொள்ள வேண்டும். இந்த வண்டியில் இடம் கொடுக்க முடியாது!" என்றார் உத்தியோகஸ்தர்.

"டர்பனில் இந்த வண்டியிலேதான் எனக்கு இடம் கொடுக்கப்பட்டது. இதிலே தான் நான் பிரயாணம் செய்வேன்" என்று உறுதியான குரலில் கூறினார் காந்திஜி.

* * *

இந்த இடத்தில் நீ ஒரு விஷயத்தை ஞாபகப்படுத்திக் கொள்ள வேண்டும், தம்பி! காந்திஜியின் குணாதிசயத்தில் ஒரு விசேஷம் அவருடைய மன உறுதி என்பதை ஏற்கனவே நீ அறிந்திருக்கிறாய். சீமைப் பிரயாணம் செய்வது தவறு என்று சாதிக் கூட்டத்தார் சொன்னார்கள்; ஆனால் காந்திஜி அதைப் பொருட்படுத்தாமல் கிளம்பிவிட்டார். சீமையில் பலர் அவரை எப்படியாவது புலால் உண்ணச் செய்து விட வேண்டும் என்று பெரும் பிரயத்தனம் செய்தார்கள்; ஆனால் அதற்கு அவர் உடன்படவில்லை. தமக்குச் சரி யென்று தோன்றுவதைப் பிறர் தடுப்பதற்காகக் காந்திஜி கைவிடமாட்டார்; தமக்குப் பிசகு என்று தோன்றுவதை மற்றவர்கள் சொல்வதற்காகச் செய்யவும் மாட்டார். இத்தகைய மன உறுதி காந்திஜியின் இயற்கையில் ஏற்பட்டிருந்தது. அந்த மன உறுதியிலிருந்துதான் சத்தியாக்கிரஹம் என்னும் புதிய அஹிம்சை ஆயுதம் உதயமாயிற்று.

பிறர் சொல்கிறார்கள் என்பதற்காக மட்டுமல்லாமல், பிறர் கஷ்டப்படுத்துவார்களே என்பதற்காகவும் சரியான காரியத்தைக் கைவிடக் கூடாது என்பது காந்திஜி உபதேசித்த முக்கிய வாழ்க்கைத் தத்துவம். அந்தத் தத்துவம் அவருடைய வாழ்க்கையில் எப்படி உருவாக ஆரம்பித்தது என்பதை இதோ நீ பார்க்கப் போகிறாய்.

* * *

பாரிஸ்டர் காந்தி "இந்த வண்டியிலேதான் பிரயாணம் செய்யப் போகிறேன்" என்று உறுதியாகச் சொன்னதும் அவரை இறக்கச் சொன்ன ரயில் உத்தியோகஸ்தருக்குக் கடும் கோபம் வந்து விட்டது. அவருடைய மீசை துடித்தது.

"மரியாதையாக இந்த வண்டியை விட்டு இறங்குகிறாயா? அல்லது போலீஸ்காரனை

அழைத்துப் பிடித்துத் தள்ளச் சொல்லட்டுமா?" என்று கேட்டார்.

"நல்லது; போலீஸ்காரன் வரட்டும். நானாக இந்த வண்டியிலிருந்து நகரப் போவதில்லை" என்றார் காந்திஜி.



ரயில்வே உத்தியோகஸ்தர் கூறியது வெறும் மிரட்டல் அல்ல. உண்மையாகவே போலீஸ்காரன் வந்தான். "இறங்குகிறாயா, மாட்டாயா?" என்று அவன் கேட்டான். "மாட்டேன்" என்றார் மோகன் தாஸ்.

உடனே அவரைக் கையைப் பிடித்துப் பலாத்காரமாக இழுத்து வெளியே தள்ளினான். அவருடைய சாமான்களையும் எடுத்து வெளியே எறிந்தான். "சாமான் வண்டிக்கு இப்போதாவது போ!" என்ற புத்திமதியும் கிடைத்தது. ஆனால் காந்திஜி சாமான் வண்டிக்குப் போகவில்லை.

ரயில் வண்டி அவர் இல்லாமலே புறப்பட்டுப் போயே போய் விட்டது!

எடுத்து எறியப்பட்ட சாமான்களில் தமது கைப் பையை மட்டும் காந்திஜி எடுத்துக் கொண்டு பிரயாணிகளின் 'வெயிடிங் ரூம்' எங்கே இருக்கிறதென்று தேடிச் சென்றார். மற்றச் சாமான்களை ரயில்வே ஊழியர்கள் எடுத்து வைத்தார்கள்.

அப்போது குளிர்காலம். தென்னுப்பிரிக்காவில் உயரமான பிரதேசங்களில் குளிர் மிகவும் அதிகம். மேரிட்ஸ்பர்க் நகரம் உயரமான இடத்தில் இருந்தது. பொறுக்க முடியாத குளிர். காந்திஜியின் 'ஓவர் கோட்' மற்றச் சாமான்களோடு அகப்பட்டுக் கொண்டது. அதைக் கேட்டு வாங்கிக் கொள்ளக் காந்திஜி விரும்பவில்லை. கேட்டால் மீண்டும் அவமதிப்புக் கிடைக்குமோ, என்னமோ? குளிரில் நடுங்கிக் கொண்டு வெளிச்சமில்லாத அறையில் தனியாக உட்கார்ந்திருந்தார். நள்ளிரவுக்கு மேல் மற்றொரு பிரயாணி அங்கு வந்தார். அவர் காந்திஜியுடன் பேச முயன்றார். ஆனால் காந்திஜிக்குப் பேசுவதற்கு வேண்டிய உற்சாகம் இல்லை.

அந்த நிலைமையில் நம்முடைய கடமை என்னவென்று மோகன் தாஸ் யோசிக்கத் தொடங்கினார். தம்முடைய உரிமைகளுக்காக இங்கேயே போராடிக் கொண்டிருப்பதா? அல்லது இந்தியாவுக்குத் திரும்பிப் போய் விடுவது உசிதமா? அல்லது அவமதிப்புகளைப் பொருட்படுத்தாமல் பிரிடோரியாவுக்குச் சென்று வந்த காரியத்தை ஒருவாறு முடித்து விட்டுப் பிறகு இந்தியா திரும்புவதா?

ஏற்றுக் கொண்டு வந்த காரியத்தைச் செய்யாமல் இந்தியா திரும்புவது கோழைத்தனமாகும் என்று அவருக்குத் தோன்றியது. பிரிடோரியாவுக்குப் போய்க் காரியத்தைப் பார்க்க வேண்டியதுதான். ஆனால் இங்கு நேர்ந்த சம்பவத்துக்குப் பரிகாரம் என்ன? சம்பவத்துக்கு மூல காரணம் எதிலே இருக்கிறது என்று காந்திஜி யோசித்தார். வெள்ளைக்காரர்களுக்குக் கறுப்பு நிறத்தினிடமுள்ள துவேஷந்தான் மூலகாரணம். அந்த நிறத்துவேஷமாகிய நோயை வேரோடு களைய வேண்டும். அதற்குப் பெரு முயற்சி செய்ய வேண்டும். அந்த முயற்சியினால் ஏற்படும் கஷ்டங்களையெல்லாம் சகித்துக் கொள்ள வேண்டியதுதான். கஷ்டப்படுவதற்குப் பின்வாங்கக் கூடாது.

இவ்விதம் மேரிட்ஸ்பர்க் ரயில்வே ஸ்டேஷன் வெயிடிங் ரூமில் நடு ராத்திரிக்குமேல் பாரிஸ்டர் மோகன் தாஸ் காந்தி தீர்மானித்தார். மறுநாள் பொழுது விடிந்ததும் ரயில்வே ஜெனரல் மானேஜருக்கும் தாதா அப்துல்லாவுக்கும் அங்கு நடந்ததைப் பற்றி விவரமாகத் தந்தி அடித்தார்.

தந்தியைப் படித்ததும் தாதா அப்துல்லாவுக்கு "இந்த வாலிப பாரிஸ்டர் நாம் சொன்னதைக் கேட்காமல் இம்மாதிரி சங்கடத்தில் அகப்பட்டுக் கொண்டாரே?"

யென்று வசிச்சலாகவேயிருந்திருக்கும். ஆனால் அதற்காக அவர் சும்மா இருந்துவிடவில்லை. உடனே ரயில்வே ஜெனரல் மானேஜரைப் போய்ப் பார்த்தார். ஜெனரல் மானேஜர் "உம்முடைய பாரிஸ்டர் பேரிலேதான் பிசகு. படுக்கை டிக்கட் அவர் ஏன் வாங்கிக் கொள்ள வில்லை?" என்றார். ஆனாலும் மேரிட்ஸ்பர்க் ஸ்டேஷன் மாஸ்டருக்கு, "காந்தி என்னும் இந்தியப் பிரயாணியை அடுத்த வண்டியில் ஜாக்கிரதையாக ஏற்றி அனுப்பி வைக்கவும்" என்று ஜெனரல் மானேஜர் தந்தி யடித்தார்.

தாதா அப்துல்லா ஜெனரல் மானேஜரைப் பார்த்ததோடு திருப்தி யடைய வில்லை. மேரிட்ஸ்பர்க் நகரிலும் அதற்குச் சமீபத்திலும் இருந்த இந்திய நண்பர்கள் பலருக்குத் தந்தி அடித்தார். அவர்கள் எல்லாரும் உடனே மேரிட்ஸ்பர்க் ஸ்டேஷனுக்கு வந்து காந்திஜியைச் சந்தித்தார்கள்.

காந்திஜிக்கு நேர்ந்தது அப்படி ஒன்றும் அபூர்வமான அநுபவம் அல்லவென்றும் தென்னாப்பிரிக்காவில் உள்ள இந்தியர்களுக்குச் சாதாரண அநுபவந்தான் என்றும் சொன்னார்கள். ஒவ்வொருவரும் இம்மாதிரி தங்களுக்கு நேர்ந்த கஷ்டங்களைப் பற்றி விவரித்தார்கள். பகலெல்லாம் இவ்விதம் சென்றது. அந்த விவரங்களைக் கேட்டதனால் காந்திஜி முதல் நாள் இரவு மனதிற்குள் செய்து கொண்ட முடிவு மேலும் உறுதிப்பட்டது. தென்னாப்பிரிக்கா வெள்ளைக்காரர்களின் நிறத் துவேஷத்தை எதிர்த்துப் போராடியே தீர வேண்டும் என்று திட சங்கல்பம் செய்து கொண்டார்.

சாயங்காலம் டர்பனிலிருந்து அடுத்த வண்டி வந்து சேர்ந்தது. அதில் காந்திஜிக்காக ஓர் இடம் ஒதுக்கப்பட்டிருந்தது. காந்திஜியும் படுக்கை டிக்கட் ஒன்று வாங்கிக்கொண்டு ரயில் ஏறினார்.

## 16. மேலும் சோதனைகள்

அந்த நாளில் டர்பனிலிருந்து பிரிடோரியாவுக்கு ரயில் மார்க்கம் நெடுகிலும் கிடையாது. வழியில் சார்லஸ் டவுன் என்னும் ஸ்டேஷனில் இறங்கிக் குதிரை வண்டியில் ஜோகானிஸ்பர்க் சென்று அங்கே மறுபடி ரயில் ஏற வேண்டும்.

சார்லஸ் டவுனில் காந்திஜி இறங்கினார். அவரிடம் குதிரை வண்டிக்கும் டிக்கட் இருந்தது. வழியில் ஒரு நாள் தாமதித்து விட்டதனால் அது செல்லாமல் போய் விடவில்லை. இதைப் பற்றி அப்துல்லா சேத் சார்லஸ் டவுனிலிருந்த குதிரை வண்டிக் கம்பெனியின் ஏஜெண்டுக்குத் தந்தியும் அடித்திருந்தார்.

ஆனால் அந்தக் குதிரை வண்டி ஏஜெண்ட் இலேசுப்பட்ட பேர்வழி அல்ல. கறுப்பு மனிதன் விஷயத்தில் அவனுக்கு ஏதேனும் ஒரு சாக்குத்தான் தேவையாயிருந்தது. "உம்முடைய சீட்டு நேற்றையச் சீட்டு; இன்றைக்கு அது செல்லாது!" என்றான். காந்திஜி "அது செல்லும்" என்று மரியாதையாக வாதாடினார். கடைசியாக, மேற்படி ஏஜெண்ட் தோல்வி யடைந்து காந்திஜிக்குக் குதிரை வண்டியில் இடங்கொடுக்கச் சம்மதித்தான்.

ஆனால் காந்திஜியின் தொல்லை அத்துடன் தீர்ந்து போய்விட வில்லை.

அந்தக் குதிரை வண்டியில் பிரயாணிகள் உள்ளே உட்காருவது வழக்கம். வண்டி ஓட்டியின் பெட்டிக்கு இருபுறத்திலும் இரண்டு இடங்கள் உண்டு. இவற்றில் ஒன்றில் வண்டியின் 'காப்டன்' உட்காருவான். இன்றைக்கு அவன் கறுப்பு மனிதனுக்கு ஒரு பாடம் கற்பிக்க விரும்பினான். வண்டிக்குள்ளே மற்ற எல்லாரும் வெள்ளைக்காரர்கள். அவர்களுக்குச் சரிசமமாக ஒரு 'கூலி'யை வண்டிக்குள் உட்கார வைக்க அவன் விரும்பவில்லை. தான் உள்ளே உட்கார்ந்து கொண்டு வண்டிக்காரனுக்குப் பக்கத்தில் காந்திஜியை உட்காரச் சொன்னான்.

இது அநீதி, அவமதிப்பு என்பது மோகன்தாஸுக்குத் தெரிந்தே யிருந்தது. ஆயினும் அவற்றைப் பொருட்படுத்தாமல் விடுவதே உசிதம் என்று அவர் நினைத்தார். அந்தச் சமயம் ஏதாவது தகராறு விளைத்தால் ரயிலைப்போல் குதிரை வண்டியும் அவரை விட்டுவிட்டுப் போய்விடலாம். ஆகவே, வண்டியின் முகப்பில் வண்டிக்காரனுக்குப் பக்கத்து இடத்தில் உட்கார்ந்தார்.

வண்டி புறப்பட்டுச் சென்றது. மத்தியானம் மூன்று மணி சுமாருக்குப் பர்தேகோப் என்னும் இடத்தை அடைந்தது. அங்கே வந்ததும் காப்டனுக்குக் குளி

பிறந்தது. வெளியில் சற்றுக் காற்றாட உட்கார்ந்து சுருட்டுப் பிடிக்க விரும்பினான்.

வண்டிக்காரன் கீழே யிருந்து கால் வைத்து அவனுடைய பெட்டி மேல் ஏறுவதற்குப் படி ஒன்று இருந்தது. காப்டன் வண்டிக்காரனிட மிருந்து அழுக்குச் சாக்குத் துணி ஒன்று வாங்கி அதில் விரித்தான். காந்திஜியைப் பார்த்து, “சாமி! இதில் உட்கார்! வண்டி யோட்டிக்குப் பக்கத்தில் நான் உட்கார வேண்டும்” என்றான்.

இந்த அநியாயத்தைச் சகித்துக் கொள்ளக் காந்திஜியினால் முடியவில்லை. மனதிற்குள் என்ன நேருமோ என்ற பயம் தோன்றிற்று. அதனால் உடம்பு நடுங்கிற்று. ஆயினும் அவர் உறுதியாகச் சொன்னார்:— “நியாயமாக எனக்கு உள்ளே இடங் கொடுத்திருக்கவேண்டும். அவ்விதம் செய்யாமல் என்னை இங்கே உட்காரச் சொன்னீர். இப்போது நீர் உல்லாசமாகச் சுருட்டுப் பிடிப்பதற்காக உம் கால் அடியில் உட்காரச் சொல்கிறீர். இது சரியல்ல. உள்ளே இடங் கொடுத்தால் போய் உட்கார்ந்து கொள்கிறேன். படியில் உட்கார முடியாது.”

இப்படிக் காந்திஜி சொல்லி முடிப்பதற்குள்ளே காப்டன் அவர் அருகில் நெருங்கினான். காதைப் பார்த்து ஓங்கி அறைந்தான். கையைப் பிடித்துக் கீழே இழுத்து விட முயன்றான். காந்திஜியின் மன உறுதி அப்போது பெரும் சோதனைக்கு உள்ளாயிற்று. வண்டிப் பெட்டியின் பித்தளைக் கம்பிகளை அவர் கெட்டியாகப் பிடித்துக் கொண்டார். மணிக்கட்டு முறிந்தாலும் பிடியை விடுவதில்லையென்று உறுதிகொண்டார். அவரை அந்தக் காதகன் அடிப்பதையும் திட்டிக் கொண்டே இழுப்பதையும் காந்திஜி பொறுத்துக் கொண்டு சும்மா இருப்பதையும் மற்றப் பிரயாணிகள் பார்த்துக் கொண்டிருந்தார்கள். அடித்தவன் பெருந்தடியன்; அடிபட்டவரோ பலமற்ற மெலிந்த மனிதர். அந்த வெள்ளைக்காரப் பிரயாணிகளில் சிலர் இரக்கம் அடைந்தார்கள். காப்டனைப் பார்த்து, “ஏன் அப்பா அவரை அடிக்கிறாய்? அவர் சொல்வது நியாயந்தானே? அங்கே இடமில்லாவிட்டால் உள்ளே வந்து உட்காரட்டும்!” என்றார்கள். “ஒருநாளும் முடியாது!” என்றான் அந்த முரடன். எனினும், சிறிது வெட்கிப் போய் அடிப்பதையும் இழுப்பதையும் விட்டான். இன்னும் சிறிது நேரம் திட்டிக் கொண்டே யிருந்தான். பிறகு, வண்டிக்காரனுக்கு மறு பக்கத்து இடத்தில் இருந்த ‘ஹாட்டன் டாட்’ வேலைக்காரனைப் படியில் உட்கார வைத்துவிட்டுத் தான் அவனுடைய இடத்தில் உட்கார்ந்தான்.

‘ஹாட்டன் டாட்’ என்று கேள்விப்பட்டிருக்கிறாய் அல்லவா? ஆப்பிரிக்காவின் ஆதி மக்களில் ‘ஹாட்டன் டாட்’ ஒரு இனம். ‘நீக்ரோ’ ‘ஸுலு’ என்பவர்களும் ஆப்பிரிக்க இனத்தார்தான். வெள்ளைக்காரர்கள் பிழைப்புத் தேடி ஆப்பிரிக்காவுக்கு வந்தவர்கள். அப்படிப் பிழைக்க வந்தவர்கள்தான் அந்த நாட்டின் பல பகுதிகளையும் தங்கள் வசமாக்கிக் கொண்டு இவ்வளவு ஆர்ப்பாட்டம் செய்தார்கள்!

• • •

வண்டி மறுபடியும் புறப்பட்டது. காந்திஜியின் நெஞ்சு அதிவேகமாக அடித்துக் கொண்டது. பிரிடோரியாவுக்கு உயிரோடு போய்ச் சேருவோமோ என்னமோ என்ற கவலையே உண்டாகி விட்டது. போதாதற்கு, வண்டித் தலைவன் அடிக்கடி அவரைக் கோபமாக முறைத்துப் பார்ப்பதும், விரலை ஆட்டிக் கொண்டே, “இரு இரு! ஸ்டாண்டர்ட்டன் போனதும் உனக்குப் பாடம் சொல்லித் தருகிறேன்” என்று உறுமுவதுமா யிருந்தான். காந்திஜி மனதிற்குள் தமக்குத் துணை புரிந்து காப்பாற்றும்படி கடவுளைப் பிரார்த்தித்துக் கொண்டிருந்தார். அந்த நிலைமையில் வேறு யாருடைய துணையைக் கோர முடியும்?

இருட்டிய பிறகு குதிரை வண்டி ஸ்டாண்டர்ட்டனை அடைந்தது. வண்டி நின்ற இடத்தில் சில இந்தியர்களின் முகங்களைப் பார்த்ததும் காந்திஜிக்கு ஆறுதல் ஏற்பட்டது. பெரு மூச்சுடன் வண்டியிலிருந்து இறங்கினார். உடனே மேற்படி இந்தியர்கள் அவரைச் சூழ்ந்து கொண்டார்கள். “சேத் அப்துல்லாவிட மிருந்து எங்களுக்குத் தந்தி கிடைத்தது. உம்மை ஈஸா சேத்தின் கடைக்கு அழைத்துப் போவதற்காக வந்திருக்கிறோம்!” என்றார்கள்.

தம்பி! இந்த நாட்டு ஜனங்களுக்குள் அடிக்கடி சாதிச் சண்டைகளும் சமூகச் சண்டைகளும் ஏற்படுவது பற்றி உனக்குத் தெரியும். அந்தச் சண்டைகளின் மிகப் பயங்கரமான பலனைச் சமீபத்தில் அநுபவித்தோம். தேசத்தின் தந்தையாகிய காந்தி மகாத்மாவை இழந்தோம். இந்தியர்களுக்குள் ஒற்றுமை யில்லாதபடியால் ஆதிகாலம் முதல் எத்தனையோ கஷ்டங்களை இந்த நாடு அநுபவித்திருக்கிறது.

ஆனால் சொந்த நாட்டில் இப்படியெல்லாம் சண்டை பிடிக்கும் இந்தியர்கள் அயல்

காடுகளுக்குப் போகும்போது பெரும்பாலும் அவர்களுக்குள் அதிசயமான ஒற்றுமையும் சகோதர பாவமும் ஏற்பட்டு விடுகிறது. சாதி — சமய வேற்றுமைகளை யெல்லாம் மறந்து அவர்கள் ஒன்றாகி விடுகிறார்கள். ஒருவருக்கொருவர் உதவி செய்யச் சந்தர்ப்பம் எங்கே கிடைக்கும் என்று பார்த்துக் கொண்டிருக்கிறார்கள்.

இதை இப்போது மோகன்தாஸ் கண்டார். ஏற்கெனவே அப்துல்லா சேத்தின் வழக்கு சம்பந்தமாகக் கவலை யடைந்தவர் தென்னாப்பிரிக்கா இந்தியர்களிடையே குடிகொண்டுள்ள சகோதர பாவத்தை அறிந்து மகிழ்ந்தார். தம்மை அழைத்துச் செல்ல வந்தவர்களுடனே சேத் ஈஸா ஹாஜி ஸுமார் என்பவரின் கடைக்குச் சென்றார். அங்கே யிருந்த இந்தியர்கள் எல்லாரும் அவரைச் சூழ்ந்து கொண்டார்கள். அவருக்கு நேர்ந்த கஷ்டங்களைக் கேட்டு அநுதாபப்பட்டார்கள். எல்லாரும் தங்கள் தங்கள் அநுபவங்களைச் சொல்லி ஆறுதலும் கூறினார்கள்.

அந்த ஊரிலிருந்த குதிரை வண்டிக் கம்பெனியின் ஏஜெண்டுக்குக் காந்திஜி வழியில் நடந்த விவரமெல்லாம் தெரிவித்துக் கடிதம் எழுதினார். ஏஜெண்டிடமிருந்து உடனே பதில் கிடைத்தது. "இந்த ஊரிலிருந்து வேறு பெரிய வண்டி போகிறது. வண்டித் தலைவனும் மாற்றப்படுகிறான். மற்றப் பிரயாணிகளோடு உமக்கு வண்டிக்குள்ளேயே இடம் தரப்படும்" என்று அந்த ஏஜெண்ட் மரியாதையாக எழுதி யிருந்தான்.

ஈஸா சேத்தின் மனிதர்கள் மோகன்தாஸை மறுநாள் காலையில் வண்டி புறப்படும் இடத்துக்குக் கொண்டு விட்டார்கள். புது வண்டியின் உள்ளே காந்திஜிக்கு நல்ல இடம் கொடுக்கப்பட்டது. வழியில் வேறு தொல்லைக்கு ஆளாகாமல் அன்றிரவு ஜோகானிஸ்பர்க் போய்ச் சேர்ந்தார்.

மேற் கூறிய சம்பவத்தைப் பற்றிக் காந்திஜீ தமது சுய சரிதத்தில் விவரித்து விட்டு முடிவுரையாக எழுதி யிருக்கிறார்: "என்னை அடித்தவன் மீது வேறு நடவடிக்கை எதுவும் எடுக்க நான் விரும்பவில்லை. ஆகவே அந்தச் சம்பவம் இத்துடன் முடிவு பெற்றது."

மேலே கூறியது போன்ற மற்றொரு சம்பவம் பிற்காலத்தில் நிகழ்ந்தது. இதைக் காட்டிலும் கொடுமையாகக் காந்திஜீ அடிக்கப்பட்டார். அப்போது தென்னாப்பிரிக்காவில் அவருடைய பெயர் பிரபலமாகி யிருந்தது; செல்வாக்கும் அதிகமாகி யிருந்தது. எனவே நடவடிக்கை எடுக்கும்படி நண்பர்கள் வற்புறுத்தினார்கள். சில வெள்ளைக்காரர்கள் தாங்கள் சாட்சி சொல்வதாகவும் முன் வந்தார்கள். ஆயினும் காந்திஜீ மறுத்துவிட்டார். "அடித்தவன் பேரில் எனக்குக் கோபம் இல்லை. பழிக்குப் பழி வாங்க மாட்டேன்!" என்று பிடிவாதமாகச் சொல்லிவிட்டார். இந்தச் செய்தி இந்தியாவுக்கு வந்தது; இந்தியப் பத்திரிகைகளிலும் பிரசுரமாயிற்று.

அதற்குள்ளாக டாக்டர் பெஸண்டு அம்மையார் இந்தியாவுக்கு வந்து இந்தியாவையே தாய் நாடாகக் கொண்டு தொண்டு செய்யத் தொடங்கி யிருந்தார். காசி ஹிந்து சர்வகலாசாலை என்று இப்போது பிரசித்தமா யிருக்கும் ஸ்தாபனம் அப்போது மத்திய ஹிந்து காலேஜ் ஆக இருந்தது. அந்தக் கலாசாலையின் மாதப் பத்திரிகை ஒன்று 'சென்ட்ரல் ஹிந்து காலேஜ் மெகஸைன்' என்ற பெயருடன் நடந்தது. அதில் டாக்டர் பெஸண்டு அம்மை ஒரு கட்டுரை எழுதினார். தென்னாப்பிரிக்காவில் ஸ்ரீ எம். கே. காந்தி தம்மை அடித்தவன் மேல் நடவடிக்கை எடுக்க மறுத்தது பற்றிக் குறிப்பிட்டார். "இவ்வளவு தயாள குணமுள்ளவர் சாதாரண மனிதர் அல்ல; அவரை 'மகாத்மா' என்றுதான் சொல்ல வேண்டும்" என்று எழுதியிருந்தார்.

அதுமுதல் மோகன்தாஸ் காந்திஜியைச் சிலர் 'மகாத்மா' என்று குறிப்பிட ஆரம்பித்தார்கள். சில காலத்துக்கெல்லாம் இந்திய தேசம் முழுவதும் 'மகாத்மா காந்தி' என்று அவரைப் போற்றியது.

இன்னும் சிலகாலத்தில் இந்த உலகம் முழுவதுமே அவரை 'மகாத்மா காந்தி' என்று போற்றப் போகிறது. (தொடரும்)

# சந்திரலேகா

ஏப்ரல்
9ந் தேதி
வெளிவருகிறது





ஜெமினியின் அற்புதமான சிருஷ்டி...



# வளரும் தமிழ்

## மணியும் மாணிக்கமும்

ஜி. யூ. போப் என்னும் ஆங்கிலப் பாதிரியார் கிறிஸ்துவ சமயப் பிரசாரம் செய்யத் தமிழ் நாட்டுக்கு வந்திருந்தார். வந்த இடத்தில் தமிழ் கற்றார். தமிழ் மொழியில் அவருக்கு அளவற்ற ஆர்வம் உண்டாயிற்று. தமிழில் உள்ள சமய நூல்களைப் படித்தார். தமிழரின் சமயத்திலும் சமய நூல்களிலும் அவருக்குப் பக்தி உண்டாயிற்று.

போப் அவர்கள் இங்கிலாந்து திரும்பிய பிறகு மிக முதிர்ந்த பிராயத்தில் திருவாசகத்தை ஆங்கிலத்தில் மொழி பெயர்க்கத் தொடங்கினார். மொழி பெயர்ப்பு முடியும் வரையில் தாம் உயிரோடு இருப்போமோ என்னமோ என்ற கவலை அவருக்கு உண்டாயிற்று.

அவருடைய நண்பரான மற்றொரு கிறிஸ்துவப் பெரியார் போப்பின் முகத்தில் கவலைக் குறியைக் கண்டு காரணம் கேட்டார். போப் காரணத்தைக் கூறித் திருவாசகத்தில் தாம் மொழி பெயர்த்திருந்த பகுதியையும் காட்டினார். அந்த நண்பர் பார்த்து விட்டு, "இந்த அற்புதமான நூலை மொழி பெயர்க்கும் பணியைத் தொடங்கியிருக்கிறீர் அல்லவா? இந்தப் பணியின் மகிமையே உமது ஆயுளை வளர்க்கும். மொழி பெயர்ப்பு முடியும் வரையில் நீர் நிச்சயம் உயிரோடிருப்பீர். கவலை வேண்டாம்" என்றார். அவருடைய வாக்கின்படி நடந்தது.

அத்தகைய அருமையான நூலைப்பற்றித் தெரிந்து கொள்ளாமலும் படித்தும் கேட்டும் ஆனந்தப்படாமலும் இருக்கும் தமிழன் உண்மைத் தமிழன் ஆகான்.

தமிழ்நாட்டில் பிறந்த ஒவ்வொருவரும் உண்மையான தமிழனாவதற்குப் பண்டித மணி கதிரேசச் செட்டியார் அவர்கள் சிறந்த பணி ஆற்றியிருக்கிறார்கள்.

திருவாசகத்தின் ஒரு பகுதியாகிய திருச்சதகத்துக்கு அருமையான முறையில் விரிவுரை எழுதியிருக்கிறார்கள்.

செட்டிநாட்டில் வளரும் தமிழன்பும் தமிழ்ப் புலமையும் ஓர் உருவம் எடுத்தன என்னும்படியான பெரியார் மகா மகோபாத்தியாய பண்டித மணி கதிரேசச் செட்டியார் அவர்கள்.

தென் மொழியிலும் வடமொழியிலும் கனி சிறந்த புலவர் அவர். பக்தியோடு பாண்டித்யமும் பெற்ற சிவநேசச் செல்வர்.

திருச்சதகத்தில் உள்ள நூற்றிரண்டு பாடல்களுக்கும் 457 பக்கங்களில் விளக்கமான உரை எழுதியிருக்கிறார். இவ்வளவையும் படித்த பிறகு திருவாசகம் திருச்சதகம் ஒருவருக்கு விளங்கவில்லையென்றால் அது அவர்களுடைய அதிர்ஷ்டம் என்றே சொல்ல வேண்டும்! திருவாசகத்துக்கு உருக வேண்டிய அவசியம் அவர்களுக்கு ஏற்படாதல்லவா?

திருவாசகத்தை அப்படி ஒன்றும் விளங்காத தமிழில் மாணிக்க வாசகப் பெருமான் எழுதிவிட வில்லை என்பதையும் சொல்ல வேண்டும். இந்த அருமையான பாடலைப் படித்துப் பாருங்கள்.

"பேசப் பட்டேன் நின்னடியாரில் திருநீறே
பூசப்பட்டேன் பூதலரால்உன் அடியானென்று
ஏசப்பட்டேன் இனிப்படுகின்ற தமையாதால்
ஆசைபபட்டேன் ஆட்பட்டேன் உன் அடி
யேனே!".

இந்த உலகத்து மனிதர்களின் சுபாவம் இப்போது போலேதான் அப்போதும் இருந்திருக்கும் போலிருக்கிறது! "உலகத்தார் நான் உன் அடியான் என்று என்னை ஏசினார்கள்!" என்று மாணிக்க வாசகப் பெருமான் அருளுகிறார். தம்முடைய உண்மைச் சிவபக்திக்கு அதையும் ஒரு அத்தாட்சியாகச் சொல்லிக் கொள்கிறார்! அந்தோ! உலகத்ீரே! பூதலத்தீரே! கடவுளின் உண்மை அடியாருக்கு அடையாளம் உம்மால் சிவசமயமாவது ஏசப்பட்டிருத்தலே போலும்!

பண்டித மணி அவர்கள் இந்த அருப்பெரும் சமயத் தொண்டிலும் தமிழ்த் தொண்டிலும் ஈடுபட்டதற்குக் காரணமாயிருந்தவர் சிறந்த தமிழன்பராகிய திரு கருமுத்து தியாகராஜ செட்டியார் என்று அறிந்து மகிழ்கிறோம்.

சிறந்த முறையில் அச்சிடப்பட்டிருக்கும் "திருவாசகம்-திருச்சதகம்" என்னும் இந்த அருமையான நூலின் விலை ரூபாய் எட்டு. புத்தகம் கிடைக்குமிடம்: பொதிகைப் பதிப்பகம் லிமிடெட், அப்பாவு முதலித்தெரு, கடலூர் N. T.

# சென்னை அஸெம்பிளியில்!.....

"நான் எவ்வளவு அபாரமான 'பைல்' தொல்லைகளில் மூழ்கிக் கிடக்கிறேன் தெரியுமா?" என்று பிரதம மந்திரி வருந்துகிறார்.

"நான் தயாரித்திருக்கும் பிரமாத மான வரவு செலவுத் திட்டம் இம் மாகாணத்தின் எல்லாப் பிரச்னை களையும் நீக்க வல்லது" என்று நிதி மந்திரி உறுதி கூறுகிறார்.

# கண்டதும் காணததும்!







சென்னை மாகாண மேல் சபையின் [illegible] விட்டு
டாக்டர் வி. கே. ஜான் எதிர்க்கட்சித் தலைவர் பதவியை ஏற்றுக் கொண்டார்.

# நடப்பதும் நடவாததும்!

-சாஸ்திரி

பீகம் அமிருதீன் முன்போல் இப்போது அதிகமாகக் கேள்விகள் கேட்பதில்லை. ஒரு வேளை சட்ட சபைத் தூக்கவியாதி அவரையும் தொத்திக்கொண்டிருக்கலாம்!

உபயோகிக்கக் கூடாத வார்த்தைகள்

எம். எல். ஏ.க்கள் நடந்துகொள்ள வேண்டிய முறைகளைப் போதிக்க ஒரு பள்ளிக்கூடம் ஆரம்பிக்கும் விஷயமாகச் சபாநாயகர் ஆலோசித்து வருகிறார்!

# காலக்ஷேபம்

### மறுபடியுமா?

தெருவில் போய்க் கொண்டிருந்த ஒருவன்மீது ஒரு கார் மோதி விட்டது. நல்ல வேளையாக அவன் அதிகக் காயம் படாமல் உயிர் தப்பினான். உடனே மோட்டாரி லிருந்த பெரிய மனிதர் அவன் கையில் ஒரு ஐந்து ரூபாய் நோட்டைக் கொடுத்து, "இந்தா, அப்பா! இதை வைத்துக்கொள். என்னுடைய நல்ல காலந் தான் நீ பிழைத்தாய்!" என்று கூறினார்.

அவன் (பணத்தை வாங்கிக் கொண்டு):- ரொம்ப சந்தோஷம். நீங்கள் மறுபடியும் இந்த வழியாக எப்பொழுது வருவீர்கள்?

★

### அந்தக் குறை!

முதல் நண்பர் :—ஸார்! எங்கள் ஊரிலே யெல்லாம் காலணா விட்டெறிந்தால் கார்படி நிலக்கடலை கிடைக்கும்.

இரண்டாவது நண்பர் :—அப்படியானால் நீங்கள் ஏன் அந்த ஊரை விட்டு வந்து விட்டீர்கள்?

முதல் நண்பர்:—அங்கே அந்தக் காலணாக் காசுகூடச் சம்பாதிக்க வழி யில்லாததனால்தான்!

★

### சமுத்திரம் பார்த்தவன்!

தாத்தா (தமது பேரனை நோக்கி) :— டேய், பயலே! நீ சமுத்திரம் பார்த்திருக் கிறாயா?

பேரன் :—ஓ! பார்த்திருக்கிறேனே!

தாத்தா :—எங்கேயடா?

பேரன் :—அம்பா 'சமுத்திரத்திலே' தாத்தா!

★

### அவனுக்குத் தெரியும்!

நண்பர் :—உன்னுடைய மனைவிக்கு இன்று ராத்திரி நான் சாப்பிட வருவது தெரியுமா?

சிநேகிதர் :—நன்றாய்த் தெரியும். இன்றைக்குக் காலையிலே இதனாலே ஒரு பலத்த சண்டைகூட நடந்ததே!

### அப்படியா சேதி?

ஒருவருடைய மனைவி தன் கணவரிடம் தன்னுடைய சிநேகிதைகளுக்கு விருந்து வைக்கப் போவதாகக் கூறினாள். உடனே அவர் ஓடி வீட்டிலிருந்த குடைகள் அனைத் தையும் ஒளித்து வைத்தார்.

மனைவி:— எதற்காகக் குடைகளை ஒளித்து வைக்கிறீர்கள்? விருந்துக்கு வருபவர்கள் உங்கள் குடைகளை எடுத்துக் கொண்டுபோய் விடுவார்களென்று நினைத்தா?

கணவர் :—இல்லை, அந்தக் குடைகளின் அடையாளத்தைக் கண்டு கொள்ளுவார்க ளென்றுதான்!

★

### முன் யோசனை!

"என்ன கணக்குப் பிள்ளை! காட்டேர் குருசாமிக்கு 'பில்' அனுப்பி விட்டீரா?"

"ஓ! அனுப்பிவிட்டேனே!"

"விற்பனை வரி மறக்காமல் போட்டீரா?"

"ஆஹா, போட்டேன்; அதோடு எட் டணாவும் சேர்த்துப் போட்டிருக்கிறேன்!"

"எட்டணா எதற்காக?"

"பணம் வருவதற்குக் குறைந்த பட்சம் இரண்டு மூன்று தரமாவது ஸைக்கிளில் போய் விட்டு வரவேண்டுமோ, இல்லையோ!"

---

## வேண்டியது என்ன?



கணவன் :— நம் இருவரில் யார் வேணும் என்று குழந்தையைக் கேட்கலாமா? என்ன, ராஜி! உனக்கு அப்பா வேணுமா, அம்மா வேணுமா?

குழந்தை :— ஒருத்தரும் வேண்டாம், அதோ இருக்கிறதே, அந்த வாழைப்பழந் தான் எனக்கு வேணும்!

**எதிர்பாருங்கள்!** **விரைவில் வெளிவருவது!**

டி. ஆர். மகாலிங்கம், எம். வி. ராஜம்மா, வள்ளி நாயகம், டி. பாலசுப்பிரமணியம், பி. எஸ். சிவபாக்கியம், பி. ஆர். மங்களம், திருவாங்கூர் சகோதரிகள், பி. ஜி. வெங்கடேசன், புளிமூட்டை ராமசாமி, பாபுன் சண்முகம் மற்றும் அநேகர்கள் நடித்த

# “ஞானசௌந்தரி”

(தமிழ்)

படவுலகிலேயே இதுவரையில் கேட்டிராத இனிய இன்ப வசனம் சங்கீதங்களுடன் திரையிடப்படும் திருநாளை எதிர்பாருங்கள்.

*

உரிமையாளர்:—திருச்சி, தஞ்சை ஜில்லாக்களுக்கு:

எஸ். முத்தையா செட்டியார், புரொப்ரைட்டர்

## நேத்தாஜி பிக்சர்ஸ் சர்க்யூட்

குளிப்பிரை, புதுக்கோட்டை

*

புக்கிங் & பிரதேச உரிமைகளுக்கு கீழ்க்கண்ட விலாசத்துக்கு எழுதவும்:

கே. ராஜகோபால் பிள்ளை

மர்ச்சண்ட், சப் ஜெயில் ரோட், மயிலம், திருச்சி

---

நந்தேச சீதோஷ்ண ஸ்திதிக்கேற்க செய்யப்பட்ட

# பில்கோ ரேடியோ



அழகிய ப்ளாஸ்டிக் பெட்டி

சாதாரண கிராமபோன் விலையில்

இப்போது உங்களுக்குக் கிடைக்கும்.

## ரூ. 385

உங்களுக்கு இஷ்டமான ஸ்டேஷன்களைக் கேட்கலாம்

விவரங்களுக்கு எழுதுங்கள்: சென்னை மாகாண, சமஸ்தான விநியோகஸ்தர்கள்

## மகமத் இப்ராஹிம் அண்ட் கோ

“விஜய மாளிகை” 7-8, மவுண்ட் ரோடு, மதராஸ்-2

“பிரதம மந்திரி பண்டித நேருவின் தேசிய உதவி நிதிக்கு உங்களது பங்கை அனுப்பி விட்டீர்களா?




ராஜசேகரன் தன் கட்டிலின்மேல் சாய்ந்தபடியே சிந்தனைக்குள் ஆழ்ந்து இருந் தான். சிகிச்சைக்கு ஒருமுறை அன்று காலை டாக்டர் ஹரிஹரன் கூறிய சொற்கள் அவனுடைய காதுகளில் ஒலித்தவண்ண மிருந்தன. "மிஸ்டர், ராஜசேகரன்! நீங்கள் அதிர்ஷ்டசாலி! இன்னும் கொஞ் சம் அதிகமாகக் காயமேற்பட்டு இருந்தால் நீங்கள் தொழில் நடத்துவதற்குப் பிரயோ சனமற்றவராகப் போயிருப்பீர்கள்!" என்று அவர் கூறியிருந்தார்.

'ஆனால் உண்மையில் தான் அதிர்ஷ்ட சாலியா என்று அவனுக்குச் சந்தேக மாகவே இருந்தது.

"டாக்டர் கூறியது உண்மையானால் பரவாயில்லை. ஆனால்......?"

அவன் சிந்தனை தடைப்பட்டது. வேறொரு காட்சி அவன் மனதில் இடம் பெற்றது.

அன்று மாலை ராஜசேகரன் ஹாஸ்டல் மைதானத்தில் 'புட் பால்' விளையாடிக் கொண்டிருந்தான். எதிர்ப்புற மிருந்த 'கோ'லை நோக்கி அவன் பந்துடன் வேக மாக ஓடிக் கொண்டிருந்தபோது, திடீ ரென்று எதிர்ப் பக்கத்தைச் சேர்ந்த ஒருவன் கால்களுடன் இவனுடைய கால்கள் இடறவே, அவன் கைகள் தரையை நோக் கக் கீழே விழுந்தான். இதனால் அவனுடைய மணிக்கட்டுக் கருகே எலும்பு முறிந்து விட்டது. அவனுடைய நண்பர்கள் அருகே யிருந்த டாக்டர் ஹரிஹரன் 'நர்ஸிங்ஹோ' முக்கு அவனைத் தூக்கிச் சென்றார்கள். அவனுடைய காயத்தைப் பரீட்சை செய்து பார்த்த பிறகுதான் "நீ அதிர்ஷ்ட சாலி!" என்றார் டாக்டர்.

கை எலும்பைத் தக்க இடத்தில் அமைக்க ஒரு முறையும், விரல்களுக்கு அசைவு இல்லாமற் போகவே அந்தக் குறையை நீக்க ஒரு முறையும் 'ஆபரேஷன்' செய்யப்பட்டது.

★

ராஜசேகரன் வைத்தியக் கல்லூரி யில் நான்காவது ஆண்டு வகுப்பில் படிக்கும் மாணவன். "எலும்பு மட்டும் முறிந்திருப்ப தால் நீ அதிர்ஷ்டசாலி! காயம் நரம்பு வரையில் எட்டி யிருந்தால் உன்னுடைய எதிர்காலமே — வைத்தியத் தொழில் நடத்துவதைப் பொறுத்த மட்டில் — இரு ளடைந்து விடும்படியாயிருக்கும்!" என்று டாக்டர் கூறியதை அவன் அடிக்கடி எண்ணி வேதனை அடைந்தான். தான் பெரிதும் விரும்பிய சஸ்திர சிகிச்சை முறையைப் பின்பற்றத் தன்னால் முடியாது என்றே அவன் கருதினான். ஆகவே டாக்டர் தன்னை 'அதிர்ஷ்டசாலி' என்று கூறியதை அவன் நம்பவில்லை. வெறும் ஆறுதல் மொழிகளென்றே அவன் எண்ணினான்.

இந்தச் சமயத்தில் கதவு திறக்கும் சத்தம் அவனுடைய வேதனையுடன் கூடிய சிந்தனையைக் கலைத்தது. "என்ன, ராஜேசுவரன்! எப்படி இருக்கிறாய்?" என்று கேட்டுக் கொண்டே உள்ளே வந்தார், டாக்டர் ஹரிஹரன்.

"குட் மார்னிங், டாக்டர்!" என்று வணக்கம் செலுத்தினான் ராஜேசுவரன். ஆனால் அவனுடைய பேச்சில் உயிரில்லை. அவன் வெறும் யந்திரம்போல் பேசியதை டாக்டர் கவனித்தும் கவனியாதவர்போல் அவனைப் பரிசோதித்துப் பார்த்துவிட்டு, "உனக்கு ஒன்றுமில்லை. அப்படி இருப்பினும்......இதோ பார், ராஜேசுவரன்!" என்று ஆரம்பித்தவர், ஒரு நிமிஷம் மேலே ஒன்றும் பேசவில்லை. ராஜேசுவரன் அவருடைய முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான். திடீரென்று அவர் ஆரம்பித்தார்:

"உனக்கு நான் இதைச் சொல்ல வேண்டிய அவசியம் ஏற்படாது என்று எண்ணியிருந்தேன். நான் எப்படி, எந்தக் கையால் ஆபரேஷன் செய்கிறேன் என்று நீ கேள்விப்பட்டிருப்பாய். இதோ, இதைப் பார்!" என்று சொல்லிக் கொண்டே அவர் தம் சட்டையைத் தூக்கிக் கையைக் காட்டி, மேலும் தொடர்ந்தார்:

"நான் உன்னைப்போல் வைத்தியக் கல்லூரியில் படித்துக் கொண்டிருந்த போது, மாடிப் படிகளிலிருந்து உருண்டு கீழே விழுந்து விட்டேன். இதனால் என் வலது கை எலும்பு முறிந்து நான் பல மாதங்கள் ஆஸ்பத்திரியில் இருக்கும்படி நேர்ந்தது. 'இனிமேல் உங்கள் படிப்பை நிறுத்தி விடலாம். அப்படியே படித்தாலும் நீங்கள் வெறும் மருத்துவனாகத் தான் இருக்க முடியும்' என்று கூறினார்கள் என்னைப் பரீட்சை செய்த டாக்டர்கள். எனக்கு என்னவோ போலிருந்தது. மன வேதனையும், சரீரத் துன்பமும் சேர்ந்து என்னை வாட்டின. ஆனால் என் மனத்தை நான் அதிக நாட்கள் தளர்ச்சியடைய விடவில்லை. 'அவர்களுடைய வார்த்தையைப் பொய்ப்பிக்க வேண்டும்' என்ற வைராக்கியம் பிறந்தது. அதன் பயனாக ஆரம்பத்தில் இடது கையால் எழுதப் பழகினேன். வலது கையால் பொருள்களைத் தூக்க மட்டுமே முடிந்தது. எல்லாக் காரியங்களையும் இடது கையாலேயே செய்து வந்தேன். முதலில் சிறிது கஷ்டமாக இருந்தது. நாளடைவில் எல்லாம் சரியாய்ப் போய்விட்டது. அதன் முடிவைத் தான் இன்று நீ உன் கண் முன் பார்க்கிறாய்!"

இதைக் கூறிவிட்டு ஏதோ அவசரமான காரியம் இருப்பது அப்போதுதான் ஞாபகம் வந்ததுபோல் அவர் திடீரென்று எழுந்து போய்விட்டார். ராஜேசுவரன் உள்ளத்தில் சொல்லொணா வேதனை குடிகொண்டது. அத்துடன் ஒருவித நம்பிக்கையும் பிறந்தது.

'டாக்டர் கூறியபடி தன்னுடைய கை சரியாகிவிடுமா? தனக்கு மிகவும் விருப்பமான சஸ்திர சிகிச்சையில் தான் பயிற்சி பெற முடியுமா? இல்லை, விதி......'

அவன் சிந்தனை அதற்குமேல் ஓடவில்லை. இருந்தாலும் அவனுடைய உள்ளத்தில் முன்பிருந்த கலக்கம் இல்லை; இப்போது ஓரளவு அமைதி ஏற்பட்டது. தானும் டாக்டர் ஹரிஹரனைப்போல் இடது கையாலாவது சஸ்திர சிகிச்சை செய்ய முற்பட்டு ஓரளவு வெற்றியும் பெறலாமல்லவா?

★

அன்று மாலை. டாக்டரின் வருகையை மிக ஆவலுடன் எதிர்பார்த்துக் கொண்டிருந்தான் ராஜேசுவரன். 'பூட்ஸ்' சத்தம் கேட்டது; அது வர வர நெருங்கியது. அடுத்த கணம் டாக்டர் அவனுடைய அறைக்குள் பிரவேசித்தார். ஆனால், அவரை ஆவலோடு எதிர்பார்த்த ராஜேசுவரனின் கண்கள், அவருக்குப் பின்னால் உள்ளே வந்த ஒரு மங்கையை நோக்கின. "ராஜேசுவரன்! நீங்கள் எனக்கு ஒர் உதவி செய்ய வேண்டும்......" என்று ஏதோ சொல்ல ஆரம்பித்த டாக்டர், அவன் தாம் சொல்வதைக் கவனிக்காதது கண்டு, "மறந்து விட்டேன், ராஜேசுவரன்! இது என் பெண் விமலா!" என்று அம் மங்கையை அவனுக்கு அறிமுகப்படுத்தினார்.



பிறகு, "இவளும் 'மெடிகல் ஸ்டுடண்ட்' தான்; வேலூரில் படிக்கிறாள். உங்களுக்கு



"உங்களுக்கு யார் வேணும்?......... மிஸஸ் சுந்தரமா? — நான்தான் அவ ளுடைய 'ஹஸ்பெண்ட்' பேசறேன்...... குழந்தை வளர்ப்புச் சங்கத்திலே அவ ளுக்கு ஒரு 'எங்கேஜ்மெண்ட்'......அதற் காகப் போயிருக்காள்!.........திரும்பி வந்ததும் சொல்லட்டுமா?........."

---

ஆட்சேபணை இல்லையென்றால்..." என்று ஆரம்பித்தவர், மேலே சொல்வதற்குத் தயங்கினார்.

அதற்குள் ராஜேசுவரன் இடைமறித்து, "எனக்கு ஆட்சேபணையே இல்லை! இந்த விஷயத்தில் உதவி செய்வது வைத்திய மாணவனுக்குக் கடமை இல்லையா? அவன் மற்ற வியாதியஸ்தர்களைப் பரிசோதிப்பது போல் தன்னையும் பிறர் பரிசோதிக்க அனு மதிக்க வேண்டாமா?" என்றான்.

பிறகு, அரைமணி நேரம் வரை அவர்கள் பேசிக்கொண்டு இருந்தனர். கடைசியில் டாக்டரும் விமலாவும் விடை பெற்றுக் கொண்டு எழுந்து சென்றபோது, ஏனோ ராஜேசுவரனின் உள்ளமும் அவர்களைப் பின் தொடர்ந்து சென்றது!

★

இரண்டு மாதங்கள் வரை ராஜேசு வரன் கைக்கட்டுடனேயே இருக்கவேண்டும் என்று டாக்டர் கூறியிருந்தார். ஆனால், அந்த இரண்டு மாதங்களும் 'சர்விஸ் ஹோ' மிலேயே இருக்க வேண்டும் என்ற அவசிய மில்லாததால், அவன் தன் வீட்டிற்கே சென்று விட்டான். ஆயினும், ராஜேசு வரன் அடிக்கடி போய் டாக்டரைப் பார்த்து வந்தான். ஆனால், அந்த ஒரு காலைத் தவிர அவன் விமலாவைச் சந்திக்கவில்லை.

அன்று மாலை மிகவும் களைப்புடன் வீட் டிற்குத் திரும்பினான் ராஜேசுவரன். அவனு டைய தாயார் அவனைப் பரிவுடன் வர வேற்று, "ராஜா! இதோ உனக்கு ஒரு கடிதம் வந்திருக்கிறது, பார்! இதைப் பார்த்துக்கொண்டிரு; காப்பியும் டிபனும் கொண்டு வருகிறேன்" என்று கூறிவிட்டு உள்ளே சென்றாள்.

கடிதத்தைப் பிரித்தபோது ராஜேசுவர னுக்கு மிகவும் ஆச்சரியம் உண்டாயிற்று. முன்பு ஒரு முறையே சந்தித்திருந்த ஒரு பெண்ணிடமிருந்து கடிதம் வந்திருந்தது தான் அவன் வியப்பிற்குக் காரணம். அவள்தான் விமலா. அவள் அவனுடைய ஆரோக்கியத்தைப் பற்றி விசாரித்து மனச் சோர்வுக்கு இடமளிக்காமலிருக்கும்படி ஊக்கமூட்டிக் கடிதம் எழுதியிருந்தாள். அதைப் படித்து முடிக்கும்போதுதான் 'பின் குறிப்பு' ஒன்று இருந்ததை ராஜேசு வரன் கவனித்தான். "இந்தக் கடிதத்தை நான் தங்களுக்கு எழுதியது என் தந்தைக் கும் தெரியும்!" என்று அதில் கண்டிருந்தது.

இதைப் பார்த்ததும் ராஜேசுவரனின் மனம் மகிழ்ந்தது. தன் சுகத்தைப் பற்றிய விஷயத்தில் டாக்டர் ஹரிஹரன் எவ்வளவு அக்கறை செலுத்துகிறார் என்பதை இதற்கு முன்பே அவன் அறிந்திருந்தான். அதற்கு இந்தக் கடிதமும் ஓர் அத்தாட்சி!—அவன் உடனே அவளுக்குப் பதில் எழுதிவிட் டான், தன் தாயின் உதவி கொண்டு!

அன்று முதல் அவர்களிடையே கடி தங்கள் மூலம் நட்புப் பிறந்தது. இரு வரும் வைத்தியக் கல்லூரிகளில் படிப்பவர்க ளாதலால், படிப்பு சம்பந்தமான சர்ச்சை களும், பொதுவாக அரசியல், சமூகப் பிரச்னைகளும் அவர்களுடைய கடிதங்களில் இடம் பெற்றன. இதுவும் ராஜேசுவரன் மன நிலைக்கு ஓரளவு உதவி செய்வதாக இருந்தது.

இரண்டு மாதங்கள் சென்றன. ராஜேசு வரனுடைய கைக் கட்டு அவிழ்க்கப்பட் டது. ஆனால் சஸ்திரங்களைக் கையாள ஆசிரியர்கள் அவனை அனுமதிக்கவில்லை. கைகள் திடம் பெறும் வரை அவன் பேசாம லிருப்பதே நல்லது என்று அவர்கள்

சொல்லி விட்டார்கள். வேறு வழியின்றி அவனும் 'சரி' என்று வாளா விருந்தான்.

★

அன்று தன் அறையில் உட்கார்ந்து கொண்டு ராஜேசுவரன் படித்துக் கொண்டிருந்தான். வாசலில் 'கார்' வந்து நிற்கும் சத்தம் கேட்டு, அவன் ஜன்னலருகே சென்று எட்டிப் பார்த்தான். அதற்குள் காரிலிருந்து இறங்கியவர்கள் உள்ளே சென்று விட்டிருந்தார்கள். அவன் மறுபடியும் படிப்பதில் ஆழ்ந்தான். அரை மணி நேரத்திற்குப் பிறகு அவன் அறைக்கு வெளியே 'பூட்ஸ்' சத்தம் கேட்டது. டாக்டர் ஹரிஹரன் அவன் அறைக்குள் பிரவேசித்தார்.

“குட்மார்னிங், ஸார்!” என்றான் ராஜேசுவரன்; தன் வியப்பை அடக்கிக் கொண்டு.

அவரும் மறு வந்தனம் அளித்துவிட்டு, “என்ன, ராஜேசுவரன்! எப்படி இருக்கிறாய்?” என்று வழக்கம்போல் கேட்டு விட்டு, “ஒரு முக்கியமான விஷயம் பேச வந்திருக்கிறேன்” என்று ஆரம்பித்தார்.

அவர் சொல்லுவதைக் கேட்க ராஜேசுவரனும் ஆவலுடன் அவரையே பார்த்துக் கொண்டிருந்தான். எப்படி ஆரம்பிப்பது என்று நிர்மானிக்க முடியாதவர்போல் டாக்டர் ஹரிஹரனும் சற்று நேரம் மௌனமாக இருந்தார். சுவரில் கடிகாரம் 'டக்' 'டக்' என்று அடித்துக்கொண்டிருந்தது.

“விமலாவிடமிருந்து கடைசியாக எப்போது உங்களுக்குக் கடிதம் வந்தது?” என்று திடீரென்று கேட்டார் டாக்டர்.

“பத்து நாட்களுக்கு முன்னால்!” என்று பதிலளித்தான் ராஜேசுவரன்.

“ஏதாவது முக்கியமான விஷயத்தைப் பற்றி......”

“அப்படி ஒன்று மில்லையே!”

மீண்டும் மௌனம்.

“விமலாவின் விவாகத்தைப் பற்றிப் பேசவே வந்தேன்......” என்றார் டாக்டர். அவர் இதழ்களில் புன்னகை அரும்பியது.

“விமலாவுக்கு விவாகமா? எப்போது?”

அவன் குரல் கம்மியது.

“ஏன், அவள் விவாகம் செய்துகொள்வதில் உங்களுக்கு விருப்பமில்லையா?”

யாழ்ப்பாணம் கீரிமலை ஷேத்திரத்தி லுள்ள புண்ணிய தீர்த்தத்தில் இலங்கைப் பிரமுகர்களான ஸ்ரீ பொன்னம்பலம், ஸ்ரீ செல்வநாயகம் ஆகியவர்கள் திரளான மக்களுடன் சென்று காந்தி மகானின் அஸ்தியைக் கரைத்த காட்சி.



"எனக்கா! அவள் விவாகத்திற்கும், எனக்கும்......"

"......சம்பந்தம் இருக்கிறது! உங்கள் அம்மாவுக்கும் சம்மதம்தான்!" என்று ஒரு பெரிய வெடிகுண்டைத் தூக்கிப் போட்டார் டாக்டர். அந்தத் தாக்குதலில் அயர்ந்து போனான் ராஜேசுவரன். உண்மையை உணரச் சில நிமிஷங்கள் ஆயிற்று அவனுக்கு.

பிறகு, "ஆனால், விமலா......?" என்றான் அவன். இன்னும் சந்தேகம் அவனுக்கு!

"அப்படியானால் அவளையே கேட்டுக் கொள்ளலாமே!" என்று எழுந்து போய், விமலாவுடன் உள்ளே வந்தார் டாக்டர்.

அடுத்த நிமிஷம் அந்த அறையில் இருவர் மாத்திரம்தான் இருந்தார்கள் — அவர்கள் ராஜேசுவரனும், விமலாவும்தான்!

எதிர்பாராத சந்திப்பினால் இருவர் வாய்களும் ஒரு கணம் அடைத்துக் கிடந்தன. ஆனால் மகிழ்ச்சி இருவர் முகத்திலும் தாண்டவமாடியது. மறுகணம், "ஒரு விஷயம், என் சந்தேகம் இன்னும் தீரவில்லை. டாக்டர் எந்தக் கையால் ஆபரேஷன் செய்கிறார்?" என்று கேட்டு அவளுடைய மௌனத்தைக் கலைத்தான் ராஜேசுவரன்.

"ஏன், நீங்கள் பார்த்ததே கிடையாதா? எல்லோரையும்போல் அவர் வலது கையால்தான் ஆபரேஷன் செய்கிறார்!" என்றாள் விமலா சிரித்துக்கொண்டே.

"அப்படியானால் அவர் இடது கையால் என்று சொன்னது......"

"பொய்தான்! உங்களுடைய கோழை மனத்தை மாற்றவே அவர் அப்படிச் சொன்னார்! அவருக்கு ஏற்பட்டதாகச் சொன்ன விபத்துக்கூட வெறும் கற்பனைதான்! ஆனால் அவருடைய ஏமாற்றம் உங்களுக்குத் தெரியாமலிருக்கும்படி அவர் நடந்துகொண்டார்!" என்று விளக்கினாள் விமலா.

"அது டாக்டரின் உதவியா!" என்றான் ராஜேசுவரன் புன்னகையுடன்.

'ஆம்' என்பதுபோல் அங்கிருந்த கடிகாரம் 'டக்' கென்று ஒலித்தது.



# நடுநிசி—
# சமையலறையில்

பெருவாரி நோய்களுக்குக் காரணமாகும் வீட்டுப் பிடைகளான அநேகம் பூச்சிகள் பகலைவிட இரவு இருட்டில்தான் அதிக சுறுசுறுப்பாக இருப்பது. உணவுப் பொருட்கள், சமையற் பாத்திரங்கள் மீதும், விடிந்தால் உங்கள் குழந்தைகள் ஓடி விளையாடும் இடங்களிலும் அசங்கியமான ரோக பீஜங்களை பரப்பி பொழுது விடிவதோடுகூட அவைகள் மாயமாய் மறைகின்றன. வீடு உண்மையில் சுத்தமாயிருக்க, விசேஷ சக்தி வாய்ந்த கிடாசினி நீர்தூவியாகிய டார்ச் பிராண்டை நீங்கள் உபயோகிக்கத்தான் வேண்டும். பகல் நீங்கள் நடமாடுகையில் ஈ, கரப்பு, மூட்டை, தென்னுப் பூச்சி, பேன், கொசு முதலிய பூச்சிகளைக் கொல்ல டார்ச் பிராண்ட் வெகு சௌகரியமானது. இரவு நீங்கள் உறங்கும்போதும் இது தன் வேலையை தொடர்ந்து செய்து வருகிறது. எனவே இதைவிட பிரயோஜனப்படக்கூடிய கிடாசினி உங்களுக்கு கிடைப்பதரிது. பரீட்சித்துப் பாருங்கள்!

டார்ச் பிராண்டை உபயோகித்து உங்கள் வீட்டிலிருந்து அசங்கியமும் அபாயகரமுமான பூச்சிகளை ஒழியுங்கள்




**கிடைத்த பலன்!**

# டார்ச் பிராண்ட்

சக்திவாய்ந்த கிடாசினி நீர்தூவி

(5% ... DDT அடங்கியது)

தயாரிப்பாளர்: பிரொக்ரெஸ்ஸிவ் கெமிகல்ஸ் கார்ப்பொரேஷன் லிட்.

ஏகபோக விற்பனை ஏஜெண்டுகள்: தி டாடா ஆயில் மில்ஸ் கம்பெனி லிட்.

D. D. T. 1398




# மூன்று கேள்விகள்

கீச்சு

ஒரு தேசத்தில் ஒரு ராஜா இருந்தான். அந்த ராஜாவுக்கு ஒரு பெண் இருந்தாள். அவளுக்குத் தான் ரொம்பப் படித்திருக்கிறோம் என்ற கர்வம் அளவில்லாமல் இருந்தது. ஆகவே, தன்னைவிடக் கெட்டிக்காரனாயிருக்கிற ராஜகுமாரனைத்தான் கல்யாணம் செய்து கொள்ள வேண்டும் என்ற எண்ணம் அவளுக்கு உண்டாயிற்று. அதற்கு அவள் ஒரு நிபந்தனை ஏற்படுத்தினாள். தன்னைக் கல்யாணம் செய்து கொள்ள விரும்புகிற ராஜகுமாரன் அவளை மூன்று கேள்விகள் கேட்க வேண்டும். அவள் அந்த மூன்று கேள்விகளுக்கும் பதில் சொல்லி விட்டால், ராஜகுமாரன் தோற்றவனாகி விடுவான். அவனுக்கு ஆயுள் பரியந்தம் சிறைத் தண்டனை விதிக்கப்படும். இரண்டு கேள்விகளுக்குப் பதில் சொல்லி ஒரு கேள்விக்குப் பதில் சொல்ல முடியாவிட்டால்கூட அவன் தோற்றவனாகத்தான் கருதப்படுவான். அப்படி ஒரே ஒரு கேள்வியாலாவது தன்னை எந்த ராஜகுமாரனாவது ஜெயித்து விட்டால், அந்த ராஜகுமாரனை அவள் விவாகம் செய்துகொண்டு விடுவாள். இதுதான் நிபந்தனை.



ராஜகுமாரியின் அழகைக் கண்டு மயங்கி அவளைக் கல்யாணம் செய்து கொள்ள ஆயிரக்கணக்கான ராஜகுமாரர்கள் வந்தனர். ஆனால், பாவம்! அவர்கள் ஒருவராலும் அவளுக்கு விடை தெரியாத கேள்விகள் கேட்க முடியவில்லை. எல்லோரும் தோற்றுப்போய் ஜெயிலில் அடைக்கப்பட்டனர். இதனால் அந்தத் தேசத்திலிருந்த சிறைகள் எல்லாமே நிரம்பிப் போய், மேற்கொண்டு வரும் ராஜகுமாரர்களை அடைப்பதற்காக வேறு புதிய சிறைகள் கட்டும்படியான நிலைமை ஏற்பட்டது.

இது விஷயத்தில் ராஜாவுக்கும் ராணிக்கும்தான் மிகவும் மன வருத்தம் ஏற்பட்டது. இதனால் தங்கள் பெண்ணுக்கு ஒருவேளை கலியாணம் ஆகாமலே போய் விடுமோ என்று அவர்கள் கவலைப் பட்டார்கள்.

ஒரு நாள் ஒரு ராஜகுமாரன் அரண்மனைக்கு வந்தான். அவன் ரொம்ப அழகாய் இருந்தான். அவனுக்கு ராஜகுமாரியைக் கல்யாணம் செய்து கொடுக்க அவள் பெற்றோருக்கு இரட்டை சந்தோஷம் தான். ஆனால் நிபந்தனை என்று ஒன்று ஏற்படுத்தியாகி விட்டதே! அதன்படிதானே நடக்கவேண்டும்? ராஜகுமாரன் அழகாயிருக்கிறான் என்பதற்காக இப்போது அதை மாற்றிக் கொள்ள முடியுமா?

ராஜகுமாரன் முதலில் இரண்டு கேள்விகள் கேட்டான். அவைகளுக்குக் கன்னத்தில் அறைந்தாற் போல் பதில் சொல்லி விட்டாள் ராஜகுமாரி. சரிதான், இவனையும் ஜெயிலில் அடைக்க வேண்டியதுதான் என்று அவளுடைய பெற்றோர் ரொம்ப வருத்தத்துடன் தீர்மானித்து விட்டார்கள்.

ஆனால் அவன் கேட்ட மூன்றாம் கேள்வி எல்லோரையும் திகைக்கச் செய்தது. "நீ கல்யாணம் செய்து கொள்ளப் போகும் ராஜகுமாரனின் பெயர் என்னவென்று உனக்குத் தெரியுமா?" என்று அவன் கேட்டான்.

ராஜகுமாரி திக்குமுக்காடிப் போய் விட்டாள். அவன் கேட்ட கேள்விக்கு அவளால் பதில் சொல்ல முடியவில்லை. எப்படிச் சொல்ல முடியும்? போட்டியில் ராஜகுமாரன் ஜெயித்து விட்டான். ராஜாவுக்கும் ராணிக்கும் ஆனந்தம் தாங்கவில்லை. அப்புறம் கேட்க வேண்டுமா? ராஜகுமாரனுக்கும் ராஜகுமாரிக்கும் 'ஜாம், ஜாம்' என்று கல்யாணம் ரொம்ப ஆனந்தமாக நடந்தது.

# ஹோட்டல் புராணம்

சோமாஸ்

புதிதாக ஓர் ஊருக்குச் செல்லும் ஒருவர், முதலில் அவ்வூரில் நல்ல ஹோட்டல் எது என்பதைத்தான் விசாரிக்கிறார். எத்தனையோ கதைகளிலும் நாவல்களிலும் இந்த ஹோட்டல்கள் முக்கிய அங்கம் வகித்துக் கதாசிரியனுக்குப் பெரிதும் துணையா யிருந்திருக்கின்றன.

ஒரு கதாநாயகன் ஒரு ஹோட்டலில் சாப்பிட்டுக் கொண்டு, தங்கும் அறையை ஒரு ராவ்சாகிப்பின் வீட்டில் வைத்துக் கொண்டிருப்பான். அந்த ராவ்சாகிப், ஹோட்டல் விடுமுறை நாட்களில் எல்லாம் அந்த வாலிபனைத் தம் வீட்டில் சாப்பிடும்படி வற்புறுத்துவார். முதலிலெல்லாம் அந்த வற்புறுத்தலைத் தட்டிக் கழித்துக் கொண்டே வந்த கதாநாயகன், கடைசியில் ஒருநாள் தன் மடமையை நினைத்து வருந்துவான். அப்படி அவன் திடீரென்று வருந்த நேர்ந்ததற்குக் காரணம் தற்செயலாக ராவ் சாகிப்பின் குமாரி — கதாநாயகி — அவன் கண்ணில் பட்டுத் தொலைத்தது தான்! அப்புறம் அவன் ராவ்சாகிப் சொல்ல வேண்டும் என்று வைத்துக் கொள்ள மாட்டான். தானாகவே ஹோட்டல் இல்லாத நாட்களில் எல்லாம் அவர் வீட்டில் சாப்பிடத் தயாராகி விடுவான். அவ்வளவுதான்; ஹோட்டல் சாப்பாடும் வீட்டுச் சாப்பாடுமாகச் சேர்ந்து கதாநாயகன் — கதாநாயகி இருவருக்கு மிடையே காதலை வளர்க்கும். அப்புறம் கல்யாணம். முடிவில் காதலர்கள் தங்களை ஒன்று சேர்த்து வைத்த ஹோட்டலை மனமார வாழ்த்துவார்கள்.

கிடைப்பதற்கரிய ஏதாவது ஒரு வஸ்துவைக் குறிப்பிட வேண்டுமானாலும் சரி, ஏதாவது காணாத காட்சியைக் காண நேர்ந்தாலும் சரி—கார்த்திகைப் பிறை, வெள்ளைக் காகம், அத்திப் பூ இவைகளையெல்லாம் உதாரணம் கூறுவது வழக்கமாயிருந்து வருகிறது. ஆனால் காலம் மாறிக் கொண்டே வருகிறது. எதிலும் ஒரு புதுமை மோகம் பிறந்து வருகிறது. ஆகையால் மேலே சொன்ன உதாரணங்களையும் புதிய முறையில் கூறவேண்டு மல்லவா? அதற்குக் கீழே வரும் சம்பவம் பெரிதும் உதவியா யிருக்கும்.

ஒரு ஹோட்டலில் சாப்பாடு நடந்து கொண்டிருந்தது. எல்லாரும் வரிசையாக உட்கார்ந்து சாப்பிட்டுக் கொண்டிருந்தனர். அப்பொழுது பந்தியில் ஒருவர், "ஹா!" என்று அதிசயத்துடன் கூவினார். அவர் உடம்பு முழுவதும் ஆச்சரியக் குறியா யிருந்தது. அவர் கையில் ஏதோ ஒரு வஸ்து இருந்தது. அதைப் பார்த்ததும் எதிர்ப்புறத்துப் பந்தியில் சாப்பிட்டுக் கொண்டிருந்த ஒருவர் ஒரே தாவாகத் தாவி அந்த மனிதருக்கு அருகில் போய் உட்கார்ந்தார். உடனே, அவரைப் பின்பற்றி எல்லோரும் ஓடி, சாப்பிட்டுக்கொண்டிருந்த அந்த மனிதரைச் சூழ்ந்து கொண்டனர். அச்சமயம் விஷயம் புரியாத பிரகிருதியொருவர், "என்ன, என்ன? என்ன ஒரே சத்தம்?" என்று சத்தம் போட்டார்.



"ஒன்றுமில்லை, ஸார்! முருங்கைக்காய் சாம்பாரில் ஒரு முருங்கைக்காய் 'தான்'

கிடைத்து விட்டதாம்!" என்று சொல்லி விஷயத்தை விளக்கி வைத்தார் ஒருவர்!

★

ஹோட்டலில் பலவிதமான பகுதிகள் இருக்கின்றன. அவைகளெல்லாம் ரஸமாயிருக்கின்றனவோ என்னவோ, அங்கே நடக்கும் சம்பவங்கள் சில ரஸமாயிருக்கின்றன. கீழே வரும் ஒரு சிறு சம்பாஷணை மேற்படி ரஸனையை ஓரளவு எடுத்துக் காட்டுகிறது.



ஒருவர் ஹோட்டலில் சாப்பிட்டுக்கொண்டிருந்தார். ஹோட்டல் முதலாளி இசைத்தட்டுச் சங்கீதத்தை ஆனந்தமாக ரஸித்துக்கொண்டிருந்தார். சாப்பிடுபவரைப் பார்த்து முதலாளி, "ஸார், பாட்டு என்றால் இதுதான் ஸார் பாட்டு! கல்லும் கரையும்படியல்லவா பாடுகிறார்!" என்றார்.

அச்சமயம் சாப்பிடுபவர் வாயில் 'டக்' என்ற ஓசையுடன் ஒரு 'மலைப் பிஞ்சு' அகப்பட்டது. உடனே அவர், "ஆமாம் ஸார்! ரொம்ப உருக்கமாய்ப் பாடுகிறார். சமையலறையில் இந்த இசைத் தட்டை வைத்தால் சாப்பாட்டில் அகப்படும் கல்லாவது கரையுமே!" என்றார் ஆத்திரமும் அநுதாபமும் தம் குரலில் தொனிக்க!

★

குறிப்பினாலும் அனுமானத்தினாலும் ஒரு விஷயத்தை நாம் நிர்ணயிக்கிறோம் அல்லவா? அந்தக் குறிப்புக்கும் அனுமானத்துக்கும் சரியான உதாரணம் காட்ட வேண்டுமானால் அதற்கும் ஹோட்டல் மிகவும் உதவியாயிருக்கிறது.

ஒரு ஹோட்டலுக்குச் சென்ற ஒருவர் அங்கு காப்பி சாப்பிட்டார். காப்பி ரொம்பவும் மோசமாயிருந்தது. முதலாளியைக் கண்டு தம் வருத்தத்தைத் தெரிவிக்க நினைத்து, 'முதலாளி எங்கே?' என்று அங்கிருந்த ஸர்வரை விசாரித்தார். வேறொரு ஹோட்டலுக்குக் காப்பி சாப்பிடப் போயிருப்பதாகப் பதில் கிடைத்தது. தம்முடைய ஹோட்டல் காப்பியைப் பற்றி அவருக்கே அவ்வளவு நல்ல அபிப்பிராயம்!

சில சமயம் நாம் அஜாக்கிரதையாயிருந்து அநாவசியமான சங்கடங்களில் அகப்பட்டுக் கொள்ளுகிறோம். அப்பொழுதுதான் நமக்கு முன் ஜாக்கிரதையின் அவசியம் தெரிகிறது. இதோ, அதற்கு ஓர் உதாரணம்:—

காதல் மணம் புரிந்து கொண்ட தம்பதிகள் ஒரு ஹோட்டலுக்குச் சென்றனர். காதலிக்கு வெட்கம் தாங்கவில்லை. ஹோட்டலில் சிற்றுண்டி சாப்பிடும் மாபெருங் கூட்டத்துக்கு மத்தியில் தான் எப்படிச் சாப்பிடுவது என்று அவள் தயங்கினாள். காதலியின் தயக்கத்தை அவள் முகபாவத்திலிருந்து அறிந்து கொண்ட காதலன், "கரும்பே, நீயும் நானும் ஈருடலும் ஒருயிருமாயிருக்கிறோம். ஆகையினால் நீ கொஞ்சங்கூட வெட்கப் படாதே!" என்றான்.

உடனே காதலி நாணத்தை விட்டு மாதுளை மொட்டு மலர்ந்ததைப்போல் தன் திருவாய் மலர்ந்து, "நாதா, நீங்களும் நானும் பேச்சளவில் ஈருடலும் ஒருயிருமாயிருக்கலாம். ஆனால் உங்களுக்கும் எனக்கும் தனித் தனியாகத்தான் பசி யெடுக்கிறது என்பதை நீங்கள் ஞாபகத்தில் வைத்துக்கொள்ள வேண்டும். ஆகையால் ஸர்வரிடம் எல்லாவற்றிலும் இரண்டிரண்டு கொண்டுவரச் சொல்லுங்கள்!" என்றாள்.

★

குறித்த காலத்தில் ஒரு காரியத்தைச் செய்யவேண்டும் என்பதற்கு ஆங்கிலேயர்களையே நாம் உதாரணமாகக் கூறுகிறோம். இனிமேல் அதற்கு அவசியம் இல்லை. நாம் ஹோட்டலுக்குப் போவதிலிருந்தே அதைச் சுலபமாய்த் தெரிந்துகொள்ளலாம். இப்பொழுது இரவு எட்டு மணிக்கு மேல் ஆகிறதல்லவா? இனிமேல் ஹோட்டலில் சாப்பாடு கிடைப்பது சிரமம் தான்; குறித்த காலத்தில் போனால் தான் அங்கே சாப்பாடு கிடைக்கும். இருந்தாலும் பார்க்கிறேன், நான் வரட்டுமா?

# தேசத்தின் கோடிக்கணக்கான மக்களுக்கு வீடுகள்...

யுத்தகாலத்தில் (1939-45) இந்தியாவின் நகரங்களையும் பட்டினங்களையும் சுற்றி ஏற்பட்ட மாறுதல்களில் ஒன்று தீவிரமான தொழில் பெருக்கம். இதனால் கிராமங்களிலிருந்து நகரங்களை நோக்கி ஜனங்கள் வெளியேற நேரிட்டு, நகரங்களில் ஜன நெருக்கம் அதிகரித்தது. ஆனால் அவ்வாறு அதிகப்படியாக வந்த ஜனங்கள் வசிக்க புதிதாக வீடுகள் அமைக்க முடியவில்லை.

ஆரோக்யமான இடங்களில் நவீன முறையில் ஏராளமாக வீடுகளை கட்ட இப்பொழுது சர்க்கார்களாலும் இதர தொழில் ஸ்தாபனங்களாலும் ஏற்பாடுகள் நடைபெறுகின்றன. இந்த திட்டங்களில் எஃகு பெருவாரியாக உபயோகப்படும்







ஒவ்வொரு நகரிலும் பல மாதிரியான 100 வீடுகளை கட்ட இவ்வகையான ஓர் திட்டம் சென்னை சர்க்காரால் தயாரிக்கப்பட்டு வருகிறது. ஜனங்களுக்கு அதிக வசதியும் ஆரோக்யத்தையும் அளிப்பதே மேற்படி திட்டத்தின் நோக்கமாகும்.

ஜனங்களுக்காக கட்டப்படும் வீடுகளை, கம்பிகளாகவும், உத்தரங்களாகவும், தகடுகளாகவும், மற்றும் இதர தேவைகளாகவும் எஃகு பலப்படுத்தும்.

குறைந்தபக்ஷம் தேவையான பரப்பு

100 சதுர அடி

பம்பாய் 27 சதுர அடி

அஹமதாபாத் 43 சதுர அடி

ஷோலாப்பூர் 24 சதுர அடி

சிபாரிசு செய்யப்பட்டிருக்கும் ஒவ்வொருவருக்கும் குறைந்தபக்ஷ பரப்பு தேவைக்கு எதிராக பம்பாய் அஹமதாபாத் ஷோலாப்பூர் நகரங்களில் ஒவ்வொருவருக்கும் உள்ள இடப்பரப்பு இங்கு காட்டப்பட்டிருக்கிறது. தேவைக்கு [illegible] அளிப்பதில் எஃகு இன்றியமையாதது.

## டாடா எஃகு

டாடா எஃகு ப்ளேட்டுகள் * தண்டவாளங்கள் * தகடுகள் * விண்டவாரும் ஆக்ஸிலும் * ஹைகார்பன் எஃகு * விசேஷ உலோக கலப்பு எஃகும் * விவசாய கருவிகள்.

தி டாடா அயர்ன் & ஸ்டீல் கோ., லிட்.
தலைமை ஸேல்ஸ் ஆபீஸ்: 102-A, நேதாஜி சுபாஷ் ரோட், கல்கத்தா



# சிக்கல் மயமான உலகில் உண்மை வாய்ந்தவை எளிதான விஷயங்களே

ஒரு சிறு வில்லை உங்களுக்கு ஆரோக்கியம் அளிக்க முடியும்

அது இயற்கைக்கு மாறாக அன்றி அதனுடன் ஒத்துவேலை செய்கிறது

ஆஸ்ப்ரோவால் இருதயத்துக்கு ஒரு கெடுதியுமில்லை

# 'ஆஸ்ப்ரோ'

வலியையும் ஜுரத்தையும் போக்கடிக்கிறது

## ஆடவர், ஸ்திரீகள், குழந்தைகள் அனைவருக்கும் ஆஸ்ப்ரோ செய்யக்கூடியதென்ன




எங்கும் கிடைக்கும்

# கமலாவின் கடிதம்

எஸ். ஆர். கிருஷ்ணன்

"அம்புஜம், அம்புஜம், சீக்கிரம் உடுப்பை மாற்றிக்கோடி! அவா வர இன்னும் முப்பது நாப்பது நிமிஷம்தான் இருக்கு; அப்பாவும் ஸ்டேஷனுக்குப் போய்விட்டார்" என்று சொல்லிக் கொண்டே மீனாட்சியம்மாள் தன் வீட்டை ஒழுங்கு செய்துகொண்டிருந்தாள்.

"என்னமோடி அம்மா, நம்ம பிராப்தம் நல்லபடியா யிருந்து, இந்த வரனாவது முடியணும்" என்று அவள் மீண்டும் தன் மகள் அம்புஜத்தை நோக்கிச் சொன்னாள்.

பாவம், அம்புஜம் என்ன செய்வாள்! பழமொழி பொய்யாகக் கூடாதல்லவா? அவளும் அண்ணாசாமி ஐயருக்கு ஐந்தாவது மகளாகப் பிறந்தாள். ஐந்து பெண்களைப் பெற்ற அரசனே ஆண்டியாகும் பொழுது, அறுபது ரூபாய்ச் சம்பளம் வாங்கும் அண்ணாசாமி ஐயர் அறுபது வயதில் என்ன செய்வார்? கடனோ உடனோ பட்டு மூத்த பெண்கள் மூன்று பேரையும் கல்யாணம் செய்து கொடுத்தார். அவர்கள் வெகு சீக்கிரம் விதவைகளாகி மறுபடியும் பிறந்தகத்துக்கே வந்து சேர்ந்தார்கள். என்ன செய்வது, அண்ணாசாமி ஐயர் வரதக்ஷிணைக்குப் பயந்து தாராள புத்தியுள்ள சில கிழ மாப்பிள்ளைகளுக்குத் தம் பெண்களைக் கொடுத்து அப்படி ஏமாந்தார். அவருடைய கஷ்டத்தைக் குறைக்க விரும்பிய எமதருமன் நாலாவது பெண்ணை மாத்திரம் அழைத்துக் கொண்டதன் மூலம் அண்ணாசாமி ஐயருக்குப் பெரும் புண்ணியம் செய்தான். கடைசி மகள் அம்புஜத்தையாவது சுமங்கலியாகப் பார்க்கவேண்டும் என்று ஐயரும் அவருடைய மனைவியும் ரொம்ப ஆசைப்பட்டார்கள். பாவம், பணத்துக்குக் குறைவு ஏற்பட்டாலும், யாருக்குத்தான் தங்கள் மகள் மீதுள்ள வாஞ்சை குறையும்?

எத்தனையோ வரன்கள் வந்தன. ஒருவனுக்குப் பெண்ணைப் பிடித்திருந்தது. ஆனால் அவனுடைய ஜாதகம் சரியாயில்லை. இன்னொருவனுடைய பெற்றோர் சம்மதித்தார்கள்; ஆனால் அவனுக்குப் பெண்ணைப் பிடிக்கவில்லை. மற்றொருவனோ, ஒப்புக் கொண்டான்; ஆனால், அவனுடைய பெற்றோர்கள் சம்பந்திக்குத் தங்களைப் போன்ற அந்தஸ்து இல்லையென்று சாக்குப்போக்குச் சொன்னார்கள். யார் செய்த அதிர்ஷ்டமோ வரமங்கலம் ராமுவய்யர் தாமும் தம் மனைவியும் அம்புஜத்தைப் பார்க்க வருவதாக எழுதி யிருந்தார். அவரை எதிர்கொண்டழைக்கத்தான் அண்ணாசாமி ஐயர் ஸ்டேஷனுக்குப் போயிருந்தார்.

* * *

சரியாக ஐந்து மணிக்கு வாசலில் குதிரை வண்டி வந்து நின்றது. சம்பந்திகள் இறங்கி வந்து காப்பி சாப்பிட்டார்கள். சற்று நேரம்வரை வேறு விஷயங்களைப் பேசிக் கொண்டிருந்த பிறகு, "அம்புஜம், ஏதாவது ஒரு பாட்டுப் பாடம்மா! உனக்கு வீணைகூடத் தெரியும் என்று உங்க அப்பா சொன்னார். எங்கே வீணையைக் கொண்டு வா" என்றாள் வரமங்கலம் ராமுவய்யருடைய மனைவி பாலம்மாள்.

அம்புஜம் வீணையை எடுத்துக்கொண்டு வந்து சற்று நேரம் வாசித்தாள். அதற்குள் சம்பந்தி அம்மாள், "உனக்கு டான்ஸ் ஆடத் தெரியுமா?" என்று அம்புஜத்தைக் கேட்டாள்.

அம்புஜத்துக்கோ கோபம் தாங்கவில்லை. 'என்ன, இந்த அம்மாள் தன் மகனுக்குப் பெண் பார்க்க வந்திருக்கிறார்களா, அல்லது ஸினிமா-டிராமாவுக்கு நடிகையைப் பொறுக்க வந்திருக்கிறார்களா?' என்று கேட்டுவிடலாமா வென்று நினைத்தாள். பிறகு, 'அப்படிக் கேட்டால் நம்மை வாயாடி என்று நினைத்துக் கொண்டு போய்விட்டால், நம்முடைய பெற்றோர்களுக்குத்தானே கஷ்டம்; பாவம் அவர்கள் எங்கிருந்து வேறு வரனைத் தேடிப் பிடிப்பார்கள்?' என்று தனக்குள் நினைத்துத் தன்னைத் தானே சமாதானம் செய்துகொண்டாள்.

சம்பந்தி அம்மாள் கூறியபடியெல்லாம் செய்து அம்புஜம் நல்லவளாகிவிட்டாள். வந்தவர்களும் மூச்சுத் திணற நன்றாகச் சாப்பிட்டார்கள். போதாக் குறைக்கு இரண்டு மூன்று சீப்பு மலைப் பழத்தையும் உள்ளுக்குத் தள்ளினார்கள். பிறகு தங்கள்

ஊருக்குப் போய்க் கடிதம் போடுவதாகச் சொல்லிவிட்டுப் போனார்கள்.

“கடவுளை வேண்டிக்கோடி அம்மா, இப்பவாவது உன் கழுத்தில் மண மாலை விழணும்” என்று அம்புஜத்தை நோக்கிக் கூறினாள் அவளுடைய தாயார் மீனாட்சி.

• • •

ஒரு வாரம் சென்றது. அன்று வெள்ளிக்கிழமை. தபால்காரன் அண்ணாசாமி ஐயரிடம் ஒரு கடிதத்தைக் கொடுத்தான். அதில் மஞ்சள் தடவியிருந்ததைப் பார்த்து அவருக்கும் மீனாட்சிக்கும் சந்தோஷம் தாங்கவில்லை. முகூர்த்தத்தைக் குறித்து அனுப்பியிருக்கிறார்களோ, அல்லது ஜாதகம்தான் வந்திருக்கிறதோ என்று அவர்கள் நினைத்தார்கள்.

கடிதத்தைப் படித்துப் பார்க்கக் கவரை உடைத்தார். இரண்டு வரிதான் படித்திருப்பார். அப்படியே மயங்கி விழுந்தார் தரையில். “அம்பு, அம்புஜம், ஓடியாடி சீக்கிரம்! அப்பாவைப் பாருடி” என்று வீறிட்டு அலறினாள் மீனாட்சி அம்மாள்.

எல்லோரும் ஓடி வந்தார்கள். ஒருத்தி ஓடிப்போய் தண்ணீர் கொண்டு வந்தாள். மற்றொரு பெண் விசிறியைக் கொண்டு வந்து விசினாள். அம்புஜமும் இன்னொரு பெண்ணும் ‘ஓ’வென்று அலறத் தொடங்கினார்கள்.

ஐயருக்கும் சுய நினைவு வந்தது. எங்கே தம் மகளோ, மனைவியோ அந்தக் கடிதத்தைப் படித்துவிடுவார்களோ வென்று பயந்து அதை எடுத்து ஒளித்து வைக்க முயன்றார். அது கைகூடவில்லை. ஏற்கெனவே அம்புஜம் அதை எடுத்துக் கொண்டு விட்டாள்.

தன் தகப்பனார் மயங்கி விழும்படியாக அந்தக் கடிதத்தில் அப்படி என்ன விஷயம் இருக்கிறதென்று பார்க்க விரும்பி அக் கடிதத்தைப் பிரித்து வாசித்தாள்.



வரமங்கலம்
30-1-36

கனம் அண்ணாசாமி ஐயருக்கு.

க்ஷேமம். க்ஷேமத்துக்கு எழுதவும். ஏதோ சாக்குப் போக்குச் சொல்லுகிறேன் என்று நினைக்க வேண்டாம். எங்களுக்கு அம்புஜத்தைப் பிடித்திருக்கிறது. ஆனால், பையன் மெடிகல் காலேஜில் சேர விரும்புகிறான். பாலம்மாளுக்கு சொந்தப் பணத்தை வீணாக்க இஷ்டமில்லை. “அப்படின்னு, அவன் மாமியார் ராத்திரிலே கொடுத்தா கொடுக்கட்டும்” என்று அவள் கூறுகிறாள்.

சூரமங்கலம் சுப்பையர் தன் மகளுக்கு ரொக்கமாகப் பத்தாயிரம் ரூபாயும், அஞ்சு வேலி நிலமும் தருவதாகச் சொல்லுகிறார். அதனாலேதான் அவர் மகள் கமலாவை அடுத்த மாதம் மூன்றாம் தேதி என்னுடைய மகனுக்குக் கல்யாணம் செய்து கொள்வதாக முடிவு

செய்திருக்கிறோம். இதையே முகூர்த்தப் பத்திரிகையாக வைத்துக்கொள்ளவும். அம்புஜத்துக்கு என் ஆசீர்வாதம். இப்படிக்கு

உங்கள் நன்மையை விரும்பும்

ராமுவய்யர்.

கடிதத்தைப் படித்ததும் அம்புஜத்துக்கு வீடே சுழலுவதுபோல இருந்தது. அவளுக்குத் துக்கம் தொண்டையை அடைத்தது. "ஓ, எங்க நன்மையையா விரும்புகிறீர்! உங்க நன்மைக்காகத்தானே கொடுத்த வாக்கையும் மீறிப் பணத்துக்கு ஆசைப்பட்டுக் கமலாவை முடிக்கிறீர்கள். எங்க ஏழ்மை உங்களுக்குத் தாழ்மையா? இருக்கட்டும். இதுதான் உலக நாடகமா?" என்று கண்ணீர் விட்டுக் கலங்கினாள்.

"சரி, அழுது என்ன பயன்? அந்தக் கமலாவுக்கே ஒரு கடிதம் எழுதுவோம். ஆண் பிள்ளைகள்தான் கல் நெஞ்சம் படைத்தவர்கள். பெண்ணுக்காவது இரக்கம் இருக்காதா? அவள் நமக்கு உதவமாட்டாளா? பார்ப்போம்" என்று தனக்குள் நினைத்து, ஒரு காகிதத்தை எடுத்தாள்.

அதைத் தன் கண்ணீராலும், மையாலும் எழுதினாள்:

அன்புள்ள கமலா,

நீ ஒரு பாக்கியசாலி என்பதில் சந்தேகம் இல்லை. ஏனென்றால், நீ அழகோ இல்லையோ, அது எனக்குத் தெரியாது. உனக்குப் பணம் இருப்பதால் விதி உனக்கு ஒரு மணமகனைத் தந்தது. அந்த விதியும் மணமகனை எனக்குக் கொடுக்கத் தவறியது. நான் தற்புகழ்ச்சிக்காக இதை எழுதவில்லை. என்னை என் சிநேகிதிகள் 'ரதி' என்பார்கள். ஆனால் என்ன பிரயோஜனம்? ஏழ்மையின் காரணமாக விதி உன் மணவாளனுக்கு என்னை மணமாலை சூடத் தடுக்கிறது. ஆம், அவர்தான் என்னைக் கல்யாணம் செய்து கொள்வதாக இருந்தது. ஆனால், பணம் அபகாரம் செய்துவிட்டது. நீ எந்தக் கயிற்றால் மணக்கோலம் அடையப் போகிறாயோ அதே கயிறு என்னை எந்தக் கோலமாக்கப் போகிறதோ தெரியவில்லை.

இப்படிக்கு

அம்புஜம்

• • •

நாட்கள் கடந்தன. கடைசியாக அந்த முகூர்த்த தினமும் ஒருவாறு வந்தது. மணவறையில் மாப்பிள்ளை உட்கார்ந்திருந்தான். ஆனால் பெண் இன்னும் வரவில்லை.

கமலா, தன் தகப்பனாருடைய காலில் விழுந்து எவ்வளவோ மன்றாடினாள், எப்படியாவது அம்புஜத்தையே வரமங்கலம் ராமுவய்யருடைய மகனுக்குக் கொடுக்க வேண்டுமென்று.

"அப்பா, நமக்கோ சொத்து எதேஷ்டமாக இருக்கிறது. நான் எத்தனையோ தடவை உங்களிடம் சொன்னேன், வேண்டினேன். அவள் ஏழை. அவளை யார் கல்யாணம் செய்துகொள்வார்கள்?



எனக்கோ வரன் இலகுவில் கிடைக்கும். நான் வாழ, அவன் சாவதா? வேண்டாம், அப்பா! அவனையே மணவறையில் உட்கார வையுங்கள்" என்று கெஞ்சினாள். ஆனால் அதற்கு அவர் இணங்கவில்லை.

"சீ! உனக்குப் புத்தி யில்லை? என்னமோ விளையாட்டாகச் சொல்லுகிறாய் என்று நினைத்தேன்; கடைசியில் வினையாகவல்லவா போச்சு! சண்டித்தனம் செய்யாமல் என் மானத்தைக் காப்பாற்று" என்றார் அவர்.

அவர் கூறியதை யெல்லாம் கவனித்த அவன் வேறு வழியின்றி மணவறைக்குப் போனான்.

கல்யாணமும் ஒருவகையாக முடிந்தது.

* * *

இரவு பன்னிரண்டு மணிக்கு மேல் இருக்கும்.

கல்யாணத்துக்கு வந்தவர்கள் எல்லோரும் அங்கங்கே படுத்து ஆழ்ந்த தூக்கத்திலிருந்தார்கள்.

கமலா மாத்திரம் தன்னுடைய அறையில் உட்கார்ந்து எதையோ யோசித்துக் கொண்டிருந்தாள். கடைசியில் அவள் ஒரு முடிவுக்கு வந்தவள்போல ஒரு கடுதாசியை எடுத்துப் பின்வருமாறு எழுதினாள்.

**அன்புள்ள அம்புஜம்.**

**உனக்குத் துரோகம் செய்து விட்டு நான் சந்தோஷமாகச் சுகித்திருக்க விரும்பவில்லை. நான் எவ்வளவோ முயற்சி செய்து பார்த்தேன். முடியவில்லை.**

**நான் போய் வருகிறேன். இந்தக் கடிதம் உனக்குக் கிடைக்கும்போது. நான் இந்த உலகத்திலேயே இருக்க மாட்டேன். என்னை ஞாபகத்தில் வைத்துக் கொள்வாய் என்று நினைக்கிறேன். இப்படிக்கு**

**கமலா**

கடிதத்தை அப்படியே மேஜை மேல் வைத்து விட்டு, அலமாரியிலிருந்து ஒரு உறை எடுப்பதற்காக எழுந்தாள். என்ன அதிசயம்! — அவளுடைய தகப்பனார் பின்னால் நின்று கொண்டிருந்தார்!

கமலா தன் தந்தையைக் கண்டதும் திடுக்கிட்டு மலைத்துப் போய் விட்டாள். அவளுக்கு என்ன செய்வதென்றே தெரியவில்லை.

சுப்பையர் ஒன்றும் பேசாமல் பக்கத்தில் இருந்த ஒரு நாற்காலியில் உட்கார்ந்து சற்று நேரம் வரை யோசனை செய்து கொண்டிருந்தார். பிறகு ஏதோ ஒரு முடிவுக்கு வந்தவர் போல "கமலா!" என்றார்.

கமலா "என்ன அப்பா?" என்று கேட்டாள்.

"நீ உன்னுடைய பிடிவாதத்தை விட மாட்டேன் என்கிறாய்.—சரி நான் ஒரு முடிவு செய்திருக்கிறேன். உனக்கு அது பிடிக்குமென்று நினைக்கிறேன்."

"என்ன முடிவு, அப்பா?"

"அம்புஜத்தை உன் அண்ணாவுக்குக் கல்யாணம் செய்து வைத்து விடுகிறேன். சரிதானே?"

கமலாவின் முகம் மலர்ந்தது.

"நாளையே அவளுக்குக் கடிதம் எழுதி விடு" என்றார் சுப்பையர்.

"நாளை என்னத்துக்கு அப்பா? இப்போதே எழுதி விடுகிறேன்" என்று சொல்லிக் கொண்டே கமலா கடுதாசியையும் பேனாவையும் எடுத்துக் கொண்டு கடிதம் எழுத உட்கார்ந்தாள்.



**தியாகராஜ நகர் ஸ்ரீ ராமகிருஷ்ண உயர்தரப் பாடசாலையில் சென்ற பல்லாண்டுகளாகத் தலைமைத் தமிழாசிரியரா யிருந்த ஸ்ரீ வி. ஆர். பஞ்சாபகேச சர்மா காலஞ்சென்றது அறிந்து பெரிதும் துயர் உறுகிறோம். ஸ்ரீ சர்மா சிறந்த தேசபக்தர். 1930-ம் ஆண்டில் உப்பு சத்தியாக்கிரக இயக்கத்தின் போது சட்ட மறுப்புச் செய்து ஆறு மாதம் சிறைவாசம் செய்தவர். சிறையிலே அவர் சந்தித்த சில தமிழன்பர்களுடன் சேர்ந்து தமிழ் படித்தார். அதிலிருந்து அவருடைய தமிழன்பு வளர்ந்தது. சிறைக்கு வெளியில் வந்த பிறகு தமிழன்பு நீடித்து அவரைத் தமிழ் வித்வான் ஆக்கிப் பரீட்சையிலும் தேறச் செய்தது. பிறகு தமிழ் ஆசிரியர் ஆனார். அவரிடம் தமிழ் கற்கும் பேறுபெற்ற மாணவர் அனைவரும் சிறந்த தேசபக்தர்களாகவும் தமிழன்பர்களாகவும் ஆனார்கள். ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷன் பள்ளியில் பல தேசிய விழாக்களும் தேசத் தலைவர்களின் படத் திறப்பு விழாக்களும் நடந்ததற்கு ஸ்ரீ சர்மா காரணமாயிருந்தார். ஸ்ரீ பஞ்சாபகேச சர்மாவின் உற்றார் உறவினருக்கும் அவருடைய அரிய தொண்டை இழந்த ஸ்ரீ ராமகிருஷ்ண மிஷனுக்கும் நமது பெருந்துயரைத் தெரிவித்துக்கொள்கிறோம்.**

# திருவாக்கு

சுந்தா

**கா**ந்தி மகான் திருவாக்கு என்ற தலைப்பைக் கண்டதும் மெய் சிலிர்த்தது. 'மகாத்மா' என்ற பட்டம் அவருக்கு எப்படிப் பொருந்துகிறதோ, அப்படிப் பொருந்துகிறது. அவர் வாய் மொழிக்குத் திருவாக்கு என்ற மகுடம்.

திருக்குறளையும் திருவாசகத்தையும் அறியக் கொடுத்து வைத்த நாம், காந்தி மகானுடைய உரைகளைத் திருவாக்கு என்றுதான் சொல்லுவோம்.

அழகாகச் சொல்ல வேண்டும் என்பதற்காக அவர் எதையும் சொல்லவில்லை; அழகாக எழுதவேண்டும் என்பதற்காக அவர் எதையும் எழுதவில்லை. ஆயினும், அவர் சொன்ன தெல்லாம், எழுதியதெல்லாம் அழகாயிருக்கின்றன.

உள்ளதை உள்ளபடி சொன்னார்; உள்ளத்தில் உள்ளதையும் சொன்னார். உண்மையை உண்மையாகச் சொன்ன காரணத்தால், அவர் வாக்கிலே அழகு நிறைந்தது. சத்தியமே சௌந்தரியம்.

எளிமையே இனிமை என்பதற்கு, காந்தி மகான் திருவாக்கு இலக்கியமாய் விளங்குகிறது.

இலக்கிய கர்த்தர்கள் மொழிக்குப் பணி செய்கிறார்கள். காந்திஜிக்கோ மொழியே பணி செய்தது. அவருடைய திருமுகத்தைக் காண்பதற்காக எப்படி மக்கள் ஓடோடி வந்தார்களோ, அப்படியேதான் சொற்களும், சொல்லணிகளும், உபமானங்களும், ரஸபாவங்களும் அவரைத் தேடி ஓடிவந்தன.

சொல்லை அடக்கினால் சித்தம் தெளியும்; சித்தம் தெளிந்தால் சொல்லும் தெளியும். காந்தி முனிவர், வாரத்துக்கு ஒரு நாள் மௌன விரதம் பூண்டிருந்து சித்தத்தையும் சொல்லையும் தெளிவாக்கி, இரண்டின் சக்தியையும் உலகத்துக்கு காட்டினார்.

அற்புதச் சொல்லணிகளைச் சிருஷ்டிப்பவர்கள் மந்திரவாதிகள் என்று வர்ணிக்கப்படுகிறார்கள்; அப்படிப் பார்த்தால் காந்திமகான் மந்திரவாதிகளுக்கெல்லாம் மந்திரவாதி. சத்யாக்ரகம் என்ற பதம், அவருடைய சிருஷ்டிகளில் உன்னதமானது. ஹரிஜன் என்பது இன்னொரு அற்புத சிருஷ்டி.

சொல்லும் சொல்லுக்குச் செயலிலே பொருள் காட்டினார் காந்திஜி.

தாய் பாஷையான குஜராத்தி, தேச பாஷையான ஹிந்துஸ்தானி, சர்வதேச பாஷையான இங்கிலீஷ் — இவை மூன்றையும் தவிர தமிழ், வங்காளி போன்ற மற்றும் சில பாஷைகளையும் காந்திஜி அறிந்திருந்தார். இவை எல்லாவற்றிற்கும் மேலாக, சொல்லுக்கு அப்பாலான பாஷைகளையும் அறிந்திருந்தார். அவை தான் மக்களின் இதய பாஷை; ஏழையின் கண்ணீர் பாஷை; தேசத்தின் நாடி பாஷை; ஆத்மாவின் அந்தரங்க பாஷை; பரமாத்மாவின் திவ்ய பாஷை!

பொய்கையில் பூக்கும் தாமரை, கடலோரத்தில் விளையும் முத்து, வானத்தில் மின்னும் நட்சத்திரம் இவற்றைத்தான் காந்தி திருவாக்குக்கு உவமை கூற வேண்டும். திருக்குறளைப் பற்றிச் சொன்னது போல, ஓதற்கு எளிது; உணர்தற்கு அரிது; நிதற்றோர் உன்னுந்தோறும் உள்ளம் உருக்கும்.

சத்தியசோதனையைப்போன்ற தொரு நூல் உலகிலே வேறு கிடையாது. 1920 ஆம் வருஷத்துக்குப் பிறகு அவர் அதைத் தொடர்ந்து எழுதவில்லை. ஆயினும் அது ஒரு பொருட்டல்ல. ஏனெனில், அதற்குப் பிறகு காந்தி சரித்திரமும் தேச சரித்திரமும் ஒன்றாயின.

காந்திஜி எழுதிய எண்ணிலாக் கட்டுரைகளும் கடிதங்களும், உலகத்தின் இலக்கியச் செல்வங்கள். உலக மஹா கிரந்தங்களிடையே, காந்தி திருவாக்கு நிரந்தரமாய் இடம்பெறும்.

காந்தி திருவாக்கால் தீயவர் நல்லவராவர்; நல்லவர் சான்றோராவர்.

★ காந்திஜி ★

## கற்ற பழமொழி

நம்மை மற்றவர்கள் கைவிட்டு விட்டாலும் கடவுள் ஒருபோதும் கைவிடமாட்டார். இதை நான் உறுதியாகச் சொல்ல முடியும். பல வருஷங்களுக்கு முன்பு நான் தமிழ் கற்றுக் கொண்டிருந்த போது, அந்த பாஷையில் உள்ள ஒரு பழமொழியைப் படித்தேன். அதை நான் மறக்கவே முடியவில்லை. திக்கற்றவனுக்குத் தெய்வமே துணை என்பதுதான் அந்தப் பழமொழி.

—காந்திமகான் திருவாக்கு 12.




**நாற்பத்தொன்பதாம் அத்தியாயம்**

## வந்தனம், போய் வாருங்கள்!

ரமாகாந் வெளியே போனவன் ஒரு மணி நேரமாகியும் திரும்பவில்லை. நேரம் ஆக ஆக ஸப் இன்ஸ்பெக்டருக்கு இருப்புக் கொள்ளவில்லை; கவலை அதிகரித்தது. கடைசியில் அவர் ஒரு குதிரைமேல் ஏறிக் கொண்டு தேவீதின் வீட்டுக்குப் போய் "ரமாகாந்த பாபு இருக்கிறாரா?" என்று கேட்டார்.

"இல்லை, அவர் இங்கிருந்து புறப்பட்டுப் போய் அரைமணி நேரத்துக்கு மேலாகி விட்டதே!" என்றான் தேவீதின்.

இன்ஸ்பெக்டர் மீண்டும் தம்முடைய பங்களாவுக்குத் திரும்பி வந்து பார்த்தார். அப்போதும் ரமாகாந் வரக் காணோம். 'ரமாகாந்தைத் தன் வீட்டுக்குள்ளேயே ஒளித்து வைத்துக் கொண்டு, தேவீதீன் ஏமாற்றி விருப்பானோ?' என்ற சந்தேகம் அவருள்ளத்தில் உதித்தது. உடனே மோட்டார் சைக்கிளை எடுத்துக் கொண்டு மறுபடியும் தேவீதீன் வீட்டுக்கு ஓடினார். தேவீதீனைக் கூப்பிட்டு அதட்டி உருட்டி பயமுறுத்திப் பார்த்தார். தேவீதீன் மெதுவான குரலில், "எசமான், உங்களுக்கு என் வார்த்தையில் நம்பிக்கை இல்லையென்றால் என் வீட்டையே சோதனை போட்டுப் பார்த்துக் கொள்ளுங்கள். எனக்கு எவ்விதமான ஆட்சேபணையும் இல்லை" என்றான்.

"அப்படியானால் அவர் எங்கே போனார் என்பதை நீதான் சொல்ல வேண்டும்."

"எனக்கு ஏதாவது தெரிந்தால் தானே நான் உங்களுக்குச் சொல்ல முடியும், எசமான்! என்னவோ வந்தார், மனைவியுடன் ஏதோ சண்டை போட்டார், திரும்பப் போய் விட்டார். எனக்கு அவ்வளவு தான் தெரியும்" என்றான் தேவீதீன்.

"சரி, அது இருக்கட்டும், அவருடைய மனைவி எப்பொழுது ஊருக்குப் போகப் போகிறாளாம்?"

"ஊருக்கா? அதைப் பற்றி அவள் இதுவரை என்னிடம் ஒன்றும் சொல்லவில்லையே! ஹைகோர்ட்டுத் தீர்ப்பு முடிகிற வரையில் அவள் இங்கேயேதான் இருப்பாள் என்று நினைக்கிறேன்."

"உன் பேச்சிலே எனக்குக் கொஞ்சங்கூட நம்பிக்கை உண்டாகவில்லை" என்று சொல்லிக் கொண்டே ஸப் இன்ஸ்பெக்டர் வீட்டுக்குள்ளே நுழைந்து கீழே உள்ள ஒரு அறைக்குள் புகுந்து அங்கே இருந்த ஒவ்வொரு சாமானையும், உன்னிப்பாகக் கவனித்தார். பிறகு மாடிக்குப் போனார். அங்கே மூன்று பெண்மணிகள் உட்கார்ந்து பேசிக் கொண்டிருப்பதைக் கண்டதும் சற்றுத் தயங்கினார். அவரைக் கண்டதும் ஜோஹிராவுக்கு ஒரு சின்ன வேடிக்கை செய்ய வேண்டும் என்று தோன்றிற்று.

அவள் அவசர அவசரமாகத் தன் முக்காட்டை இழுத்துப்போர்த்திக் கொண்டாள்; கைகளையும்கூட வெளியே தெரியாமல் மறைத்துக் கொண்டாள். அதைப் பார்த்ததும் இன்ஸ்பெக்டர், 'ரமாகாந்தான் நம்மை ஏமாற்றுவதற்காக இப்படி வேஷம் போட்டுக் கொண்டு உட்கார்ந்திருக்க வேண்டும்' என்று சந்தேகப் பட்டார். ஆகவே அவர் தேவிநீனைப் பார்த்து, "அந்த மூன்றாவது பெண் யார்?" என்று கேட்டார்.

"எனக்குத் தெரியாது. ரமாகாந்த பாபுவின் மனைவியைப் பார்ப்பதற்காக அவள் அடிக்கடி இங்கே வருகிறாள். எனக்கு அவ்வளவுதான் தெரியும்" என்றான் தேவிநீன்.

"டேய்! என்னிடமே உன் வேலையைக் காட்டுகிறாயே! குற்றவாளிக்குப் புடைவையைக் கட்டிவிட்டு என்னை ஏமாற்ற நினைக்கிறாயா? இரு, சொல்லுகிறேன் உன்னை—பத்மா தேவி, நீங்கள் சற்றுக் கீழே இறங்கிப் போங்கள்" என்று அதிகார தோரணையில் சொன்னார் ஸப் இன்ஸ்பெக்டர்.

பத்மா கீழே இறங்கிச் சென்றதும், ஸப் இன்ஸ்பெக்டர் ஜோஹிராவின் அருகில் சென்று, "என்ன ஸார், இது? நல்ல வேஷம் போடுகிறீர்களே! போனதும் உடனே திரும்பி வந்து விடுகிறேன் என்று என்னிடம் சொல்லிவிட்டு வந்தீர்கள். ஆனால் இங்கே ஒரேயடியாக வேரூன்றி விட்டீர்களே! போதும் இந்த வேஷம்! கலைத்து விட்டுப் புறப்படுங்கள். நேரமாகிறது" என்றார்.

பிறகு மெதுவாக அவர் ஜோஹிராவின் முக்காட்டை அகற்றினார். ஜோஹிரா 'கட கட' வென்று சிரித்துவிட்டாள்.

"நான் வருவதற்கு முன்பே அவர் இங்கிருந்து போய்விட்டாராமே!"

"அது இருக்கட்டும். பத்மா தேவி இங்கேயிருந்து எப்பொழுது ஊருக்குப் போகிறளாம்?"

"அந்தக் கவலை இனிமேல் உங்களுக்கு வேண்டாம். அவள் இங்கே இருந்தாலும் ஒன்றுதான்; ஊருக்குப் போனாலும் ஒன்றுதான். நான் நன்றாக உரையேற்றி அவளுடைய மனதை அடியோடு மாற்றி விட்டேன். போதாக் குறைக்கு, இன்று ரமாகாந்த பாபு அவளை ரொம்பவும் கடிந்து கொண்டு விட்டாராம். பாவம், ரொம்ப பயப்படுகிறாள்!"

"இனிமேல் அவள் நமக்கு ஒன்றும் தொந்தரவு கொடுக்கமாட்டாளே?"

"மாட்டாள் என்றுதான் நினைக்கிறேன்."

"சரி, ரமாகாந்த பாபு எங்கே போயிருப்பார்?"

"எனக்கென்ன தெரியும்?"

"எதற்கும் இப்பொழுதே போய் டிபுடி சூபரின்டெண்டுக்கும் ஸர்க்கிளுக்கும் இதை 'ரிப்போர்ட்டு' செய்து விடுவதுதான் நல்லது. ஆமாம், நீ வீட்டுக்குப் போகவில்லையா? நான் வேண்டுமானால் உன்னை உன் வீடுவரை கொண்டுவந்து விட்டு விட்டுப் போகிறேன். என்ன, வருகிறாயா?"

"பேஷாய் வருகிறேன். தங்கள் சயவுக்கு ரொம்ப ரொம்ப வந்தனம்" என்றாள் ஜோஹிரா.

ஸப் இன்ஸ்பெக்டர் ஜோஹிராவைத் தன் மோட்டார் சைக்கிளில் உட்கார வைத்துக்கொண்டார். சிறிது நேரத்துக் கெல்லாம் ஜோஹிராவை அவள் வீட்டு வாசலில் கொண்டுபோய் இறக்கினார்.

ஸப் இன்ஸ்பெக்டர் அப்படியே பிரமித்துப் போய், "அடே! நீயா? நீ இங்கே என் வந்தாய்?" என்று கேட்டார்.

"என் 'டியூடி'யைக் கவனிக்க வேண்டும் அல்லவா! அதற்காகத் தான் வந்தேன்."

"ரமாகாந்த பாபு எங்கே போனார் என்று உனக்கு ஏதாவது தெரியுமா, ஜோஹிரா?"



ஆனால் அதற்குள் அவருடைய மனதில் ஒரு அசட்டு ஆசை உதித்தது. ஜோஹிராவுடன் கொஞ்சிக் குலாவ விரும்பினார். "ஜோஹிரா, உன்னுடன் மனம் விட்டுப் பேசி ரொம்ப நாளாகி விட்டது. இப்பொழுது உன்னைப் பிரிந்து போவதென்றால் மனம் கேட்கவில்லை. இரு, நானும்இதோ வருகிறேன்" என்றார்.



ஜோஹிரா மாடிப்படியில் ஏறிக்கொண்டே, "உடனே போய் ரிப்போர்ட்டு செய்யவேண்டும் என்று சொன்னீர்களே, போங்கள். இது வம்பு அளப்பதற்கு நேரமா?" என்றாள்.

ஸப் இன்ஸ்பெக்டர் மோட்டார் சைக்கிளிலிருந்து இறங்கிக்கொண்டே, "அதற்கொன்றும் இப்பொழுது அவ்வளவு அவசரமில்லை. காலையில் போய் ரிப்போர்ட்டு செய்தால் போகிறது — இரு, நானும் இதோ வந்துவிட்டேன்" என்றார்.

"இல்லை, இன்றைக்கு வேண்டாம். டிபுடி சூபரின்டெண்டு இப்போது இங்கே வரப் போவதாகச் சொல்லியனுப்பியிருக்கிறார்" என்றாள் ஜோஹிரா.

"என்னையே ஏமாற்றப் பார்க்கிறாயே, ஜோஹிரா! இது நன்றாயிருக்கிறதா?" என்று சொல்லிக்கொண்டே இன்ஸ்பெக்டர் மாடிப்படி ஏற ஆரம்பித்தார்.

ஆனால் அதற்குள் ஜோஹிரா 'விடு விடு' என்று மேலே ஏறிப் போய் கதவைத் தாளிட்டுக் கொண்டாள். பிறகு ஜன்னல் வழியாக எட்டிப் பார்த்து "வந்தனம், போய் வாருங்கள் நாளை மீண்டும் சந்திப்போம்" என்று இன்ஸ்பெக்டருக்கு விடை கொடுத்தாள்.

## ஐம்பதாம் அத்தியாயம்

## பத்மாவின் வாக்குமூலம்

ஸப் இன்ஸ்பெக்டர் தம்முடைய வீட்டுக்குப் போய்ப் படுத்துக்கொள்ளும் பொழுது மணி பதினொன்றுக்கு மேல் ஆகிவிட்டது. மறு நாள் அவர் தூக்கம் கலைந்து கண் விழித்தபொழுது மணி எட்டு அடித்தது. அவர் படுக்கையை விட்டு எழுந்து உட்காரக்கூட இல்லை; டெலிபோன் மணி அடித்தது. எழுந்துபோய் டெலிபோனைக் கையில் எடுத்தார். பேசினவர் டிபுடி சூபரின்டெண்டு.

"ரமாகாந்த் பெரிய 'கோல்மால்' செய்துவிட்டான். அவனை வேறிடத்துக்குக் கொண்டுபோய் வைக்கப் போகிறோம். அவனுடைய சாமான்களையெல்லாம் சூபரின்டெண்டிடம் அனுப்பி வையுங்கள். நேற்று இரவு அவன் பங்களாவில் இருந்தானா, இல்லையா?"

"இல்லை ஸார்! நேற்று இரவு ஏதோ சாக்குப் போக்குச் சொல்லிவிட்டு அவன் தன் மனைவியைப் பார்க்கப் போய்விட்டான்" என்றார் ஸப் இன்ஸ்பெக்டர்.

"நீர் ஏன் அதற்கு இடம் கொடுத்தீர்? அவன் ஜட்ஜ் வீட்டுக்குப் போய் நம்முடைய 'குட்'டை எல்லாம் உடைத்து விட்டான். ஜட்ஜ் சட்டத்தையெல்லாம் மீறி மறுபடியும் வழக்கை விசாரிக்கப் போகிறாராம். அவன் தன் வாக்குமூலத்தை மாற்றிக் கொள்ளப் போகிறான். எல்லாம் உம்மால் வந்தது. நம்முடைய முயற்சிகள் எல்லாம் குட்டிச்சுவராகிவிட்டன. உம்முடைய முட்டாள்தனத்தை என்னவென்று சொல்லுவது? நீர் அவனைப் பலவந்தமாகத் தடுத்திருக்க வேண்டாமா? ஜோஹிராவும் நம்மை மோசம் செய்துவிட்டாள். எல்லாம் உம்மால் வந்த வினை!" என்று டிபுடி டெலிபோனில் சீறி விழுந்தார்.

அடுத்த கணமே ஸப் இன்ஸ்பெக்டர் ரமாகாந்தின் சாமான்களையெல்லாம் எடுத்துக் கொண்டு சூபரின்டெண்டின் பங்களாவுக்கு ஓடினார். அவருக்கு ரமாகாந்த்மீது கோபம் கோபமாக வந்தது. அவன் மட்டும் அந்தச் சமயம் அவருடைய கையில் அகப்பட்டிருந்தால், அப்படியே விழுங்கியிருப்பார். "அந்த மடையனுக்கு எத்தனை தடவை படித்துப் படித்துச் சொன்னேன், கிளிப்பிள்ளைக்குச் சொல்லுவது போல. இல்லாத ஆசார-உபசாரம் எல்லாம் செய்தேன். கடைசியில் அவன் இப்படி முழு மோசம் செய்து விட்டானே! இந்தக் கிறுக்கி ஜோஹிராவும் அல்லவா அவனுடன் கூடி நமக்கு வஞ்சகம்

செய்துவிட்டான். 'மனைவியைப் பார்த்து விட்டு வருகிறேன்' என்று நம்மை ஏமாற்றி விட்டு இப்படி ஓடி விட்டானே! இதற்கு அந்த தேவியின் பயலும் உடந்தையாயிருப்பானோ? எல்லோரையும் ஒரு கை பார்த்துவிடுகிறேன். நம்மை என்னவென்று எண்ணிக் கொண்டிருக்கிறார்கள் இந்தப் பயல்கள்!''

ஒரு வாரம் வரை போலீஸ் இலாகா ஒரே அமளிதுமளிப்பட்டது. போலீஸ் அதிகாரிகளுக்கு இரவுபகல் எந்நேரமும் ஒரே சிந்தனை தான். வழக்கைவிட, அவரவர் கவலைதான் அவரவருக்கு அதிகமாகயிருந்தது. மிகவும் கவலையினால் பாதிக்கப்பட்டவர் ஸப் இன்ஸ்பெக்டர்தான். அவருக்குத் தாம் தப்ப முடியும் என்ற நம்பிக்கையே இல்லை. ஸர்க்கிள் இன்ஸ்பெக்டரும் டிபுடி ஸுபரின்டெண்டும் முழுப் பொறுப்பையும் இன்ஸ்பெக்டருடைய தலைமீது கட்டிவிட்டு, தங்களுக்கு ஒருவித சம்பந்தமும் இல்லாதவர்கள் போல இருந்தார்கள்.

நகரமெங்கும் அந்த வழக்கைப் பற்றியே பேச்சாக இருந்தது. இம்மாதிரி வழக்கு எப்பொழுதுமே நடந்ததில்லை என்று ஜனங்கள் பேசிக் கொண்டார்கள். வக்கீல்கள் 'சட்டம் என்ன சொல்லுகிறது? ஜட்ஜுக்கு வழக்கை மறுபடியும் விசாரிக்க அதிகாரம் இருக்கிறதா?' என்று சட்டப் புத்தகங்களைப் புரட்டி ஆராயத் தொடங்கினார்கள். ஆனால் ஜட்ஜ் மட்டும் மிகத் தீவிரமாக இருந்தார். போலீஸார் கனகாணம் போட்டுப் பார்த்தார்கள். போலீஸ் கமிஷனர், 'போலீஸ் இலாகாவுக்கே அழியாத அபகீர்த்தி ஏற்பட்டுவிடும்' என்று சொல்லிப் பார்த்தார். ஆனால் ஜட்ஜ் சிறிதும் அசைந்து கொடுக்கவில்லை. பொய்ச் சாட்சியின் பலத்தைக் கொண்டு நிரபராதிகளான பதினைந்து ஜீவன்களின் வாழ்க்கையைக் குலைக்க அவருடைய மனச் சாட்சி இடம் கொடுக்கவில்லை. அவர் ஹைகோர்ட்டுக்கும் சர்க்காருக்கும் அதைப் பற்றி அறிவித்து விட்டார்.

போலீஸார்கள் ரமாகாந்தைத் தேடிக் கண்டு பிடிப்பதற்குப் படாதபாடுகள் எல்லாம் பட்டுப் பார்த்துவிட்டார்கள். அவன் அவர்களுடைய கண்களில் படாமல் எங்கேயோ கண் காணாத இடத்தில் ஒளிந்து கொண்டு விட்டான்.

அந்த வழக்கைப் பற்றிப் பத்திரிகைகளில் செய்தி வராத நாளே கிடையாது. ஒரு பத்திரிகைக்காரர் பத்மாவைப் பேட்டி கண்டு சில தகவல்கள் வெளியிட்டால் இன்னொரு பத்திரிகாசிரியர் ஜோஹிராவைச் சந்தித்துச் சில தகவல்கள் சேகரித்து வெளியிடுவார். பத்மா, ஜோஹிரா—இருவருடைய வாக்குமூலங்களும் போலீஸாரின் வழக்கை நிர்மூலமாக்கிவிட்டன. ஜோஹிராவின் கடிதம் ஒன்று ஒரு பத்திரிகையில் வெளியாகியிருந்தது. அதில் அவள், ''ரமாகாந்த பாபுவை மயக்கி வழிக்குக் கொண்டு வரவேண்டும். அவருக்கு யோசிக்கவே சந்தர்ப்பம் அளிக்கக்கூடாது என்பதற்காக போலீஸார் எனக்கு நாளொன்றுக்கு ஐம்பது ரூபாய் கொடுத்து வந்தார்கள்'' என்றும் குறிப்பிட்டிருந்தாள். இவற்றைப் படிக்கப் படிக்கப் போலீஸாரின் ஆத்திரம் பன்மடங்கு அதிகமாகியது. ஜோஹிராவும் பத்மாவும் தலைமறைவாய் இருந்ததினால் பிழைத்தார்கள்; இல்லாவிட்டால் போலீஸார் தங்களுக்கு வந்த ஆத்திரத்தில் அவர்களையும் ஒரு கை பார்த்திருப்பார்கள்.

கடைசியில் இரண்டு மாதங்களுக்குப் பிறகுதான் தீர்ப்புச் சொன்னார்கள். அதை விசாரிப்பதற்காக ஒரு 'ஸிவிலியன்' அதிகாரி நியமிக்கப்பட்டார். அதிகக் கூட்டம் கூடி விடாமல் இருக்க வேண்டும் என்பதற்காக வழக்கு விசாரணை நகரத்துக்கு வெளியே ஒரு பங்களாவில் நடந்தது. இருந்தாலும் கூட்டத்துக்குக் குறைவில்லை. குற்றம் சாட்டப்பட்டவர்களில் யாரை யாவது ஒருவரை 'அப்ரூவர்' ஆக்கிவிட



டாக்டர் :—எனக்கு அங்கு வர நேரம் இல்லை! டெலிபோனை மார்பில் வைத்துக் கொள்ளுங்கள்..... இங்கு இருந்தே பரிசோதிக்கிறேன்......உம், கொஞ்சம் இருமுங்கோ?

வேண்டுமென்பதற்காகப் போலீஸார் தலை கீழாக நின்று பார்த்தார்கள்; பலிக்கவில்லை. ஸப் இன்ஸ்பெக்டர் மட்டும் மனது வைத்திருந்தால் யாராவது ஒருவனைப் பிடித்து வந்திருப்பார். ஆனால் அவருக்கு மேலதிகாரிகளுடைய சுயநலம் கொஞ்சம் கூடப் பிடிக்கவில்லை. 'நல்ல பெயர் கிடைத்தால் மேலதிகாரிகள் தட்டிக் கொண்டு போகிறார்கள். கெட்ட பெயர் கிடைத்து விட்டால் கீழதிகாரிகளுடைய தலையில் அதைச் சுமத்திவிடுகிறார்கள். அப்படியிருக்கும் பொழுது நமக்கு என்ன அவ்வளவு கர்ம சிரத்தை? புதுச் சாட்சி சம்பாதிக்க நாம் ஏன் சிரமப்படவேண்டும்?' என்று ஸப் இன்ஸ்பெக்டர் பேசாமல் இருந்து விட்டார்.

அந்த வழக்கில், மேலதிகாரிகள் தங்கள் வழக்கம் போல் குற்றங்களை யெல்லாம் ஸப் இன்ஸ்பெக்டர் மீதுதான் சுமத்தினார்கள். ஸப் இன்ஸ்பெக்டருடைய அலட்சியத்தினால்தானே ரமாகாந்த் தப்பித்து ஓடிப் போனான்? அவர் இன்னும் சற்றுக் கடுமையாகக் கண்காணித்திருந்தால், பத்மா அவனுக்குக் கடிதம் தான் எழுதியிருக்க முடியுமா, அல்லது அவன் தான் இரவு வேளையில் பத்மாவைப் பார்க்கப் போயிருக்க முடியுமா?

இம்மாதிரி நிலைமையில் வழக்கைத் தள்ளி விடுவதைத் தவிர வேறு என்ன செய்ய முடியும்? ஸப் இன்ஸ்பெக்டர் 'பிளாக் மார்க்' பெற்றது மட்டுமின்றி ஹெட்கான்ஸ்டபிளாகவும் மாற்றப்பட்டார்.

கைதிகள் விடுதலையான அன்று சிறைவாசலில் ஏகக் கூட்டம் கூடியிருந்தது. போலீஸார் கைதிகளை இரவு பத்து மணிக்கு மேல் தான் வெளியே விட்டார்கள். இருந்தாலும் கூட்டம் குறைய வில்லை. ஜனங்கள் அங்கே பத்மாவையும் அழைத்துக் கொண்டு வந்திருந்தார்கள். அவன் பின்னாலே தேவீநீனும் வந்திருந்தான். 'பத்மாவுக்கு ஜே!' என்ற கோஷம் வானளாவியது; பூமாரியும் பொழிந்தது.

ஆனால் ரமாகாந்துக்கு மாத்திரம் விமோசனம் பிறக்கவில்லை. அவன்மீது, 'பொய்ச் சாட்சியம் சொன்னான்' என்று குற்றம் சாட்டப்பட்டு வழக்குத் தொடருவது என்று நிச்சயித்து விட்டார்கள். (தொடரும்)



## காலணா போதும்!

ஹைதராபாத் நைஜாம் பெரிய பணக்காரர். உலகத்தில் உள்ள பெரிய கோடீஸ்வரர்களில் அவரையும் ஒருவராகச் சொல்லலாம். அவரிடம் இருக்கும் தங்கத்துக்கும் வைரங்களுக்கும் அளவே இல்லையாம்.

இவ்வளவு செல்வத்தைப் பெற்றிருந்துங்கூட அவருக்கு இன்னும் பண ஆசை போகவில்லை. மேலும் மேலும் பணத்தைச் சேர்த்துக் கொண்டிருப்பதிலேயே அவர் கண்ணுங் கருத்துமாய் இருப்பது வழக்கமாம்.

ஒருமுறை யாரோ ஒரு பிரமுகர் நைஜாமைப் பார்க்க அவருடைய மாளிகைக்குப் போனாராம். அப்போது நைஜாம் தூங்கிக் கொண்டிருப்பதாக அவருக்குத் தகவல் கிடைத்தது. 'சரி, அப்புறம் வந்து பார்த்துக் கொள்ளலாம்' என்று கருதி அவர் வெளியே வந்தார். அப்போது வாசலில் இருந்த காவல்காரன் அவரைப் பார்த்து, "என்ன, உங்களுக்குப் பேட்டி கிடைக்கவில்லையா?" என்று கேட்டான்.

"இல்லை, அவர் தூங்கிக் கொண்டிருக்கிறாராம்!" என்றார் பிரமுகர்.

"ப்பூ, அதனால் என்ன! நைஜாமுக்குப் பக்கத்திலே போய் நின்றுகொண்டு, இரண்டு காலணா நாணயங்களை எடுத்து ஒன்றோடொன்று தட்டுங்கள். அவர் அலறிப் புடைத்துக் கொண்டு எழுந்திருக்கா விட்டால் அப்புறம் என்னைக் கேளுங்கள்!" என்றான் காவல்காரன்.




சாரிடோன்
எல்லா வலிகளையும் நிறுத்துகிறது
10 Saridon
BRAND ANALGESIC TABLETS

# உங்கள் கூந்தல் இம்மாததிரி படியாமலிருந்தால்



## அதை ஸ்வஸ்திக் வாசனையிடப்பட்ட ஆமணக்கெண்ணெயால் படியச்செய்யுங்கள்



உங்கள் கூந்தல் கருட்டையாவும் படியாமலுமிருந்தால் கண்ட தைலங்களால் உங்களுக்கு ஒரு பிரயோஜனமும் உண்டாகாது. ஸ்வஸ்திக் வாசனை கூட்டப்பட்ட ஆமணக்கெண்ணெ, உங்கள் நீல மயிரின் அழகை வெளிப்படுத்தி கூந்தல் நன்றாக வளர்ந்து கொள்ளும்படி உதவுகிறது. அதி மனோஹரமான வாசனையுடைய நல் ஸ்வஸ்திக் பரிமள ஆமணக்கெண்ணெயை பெருமக்களும் தேர்ந்த ஆடவரும் வேண்டுமென்றும் விரும்பிப் போற்றுகிறார்கள்.

இதர உயர்தர ஸ்வஸ்திக் தயாரிப்புகள் காந்தி சோப், ஸ்வஸ்திக் ஆவா சோப், சலவை சோப்புகள், கோவாவின் பிராந்ட் வனஸ்பதி முதலியன.



# வாசனைகூட்டப்பட்ட ஆமணக்கெண்ணெ

ஸ்வஸ்திக் ஆயில் மில்ஸ் லிமிடெட், பம்பாய்



Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press 116-119, Sladens Garden, Poonamalle High Road, Kilpauk Madras.

# "எவர்ஸில்வர்"

## பாத்திரங்கள்

**வெள்ளியின் அந்தமும் இரும்பின் உறுதியும் ஒருங்கே கொண்டவை**

*(பம்பாய் தேவிதயாள் கம்பெனியாரால் தயாரிக்கப்பட்டவை)*

●

*தென்னிந்தியாவிற்குப் பூரண விநியோகஸ்தர்கள் :*

**ஸாம்ஸன் & கோ.,**

எஞ்ஜின், எலக்ட்ரிக் மோட்டார், பம்பு ஸெட் டீலர்கள்

8/22, பிராட்வே, மதராஸ்

தந்தி: "BARAPASH"] [போன்: 4521

●

*வெளியூரில் கிடைக்குமிடம் :*

*தென்னாற்காடு ஜில்லாவிற்கு :*

**C. T. சோமையா செட்டியார்**

C/o Y. PR. KR. ST. பாங்க்

பண்ருட்டி (தென்னாற்காடு ஜில்லா)

*சேலம் ஜில்லாவிற்கு :*

**எஸ். வி. ராமநாதன்**

**C/O சூடாமணி ஸ்டோர்ஸ்**

தில்லைநகர், நாமக்கல் (சேலம்)

*தஞ்சை ஜில்லாவிற்கு :*

**எம். வி. எம். ஸ்டோர்ஸ்**

கும்பேஸ்வரர் சன்னதித் தெரு

கும்பகோணம்

*திருச்சி ஜில்லாவிற்கு :*

**ST. PR. சிதம்பரம்**

63 வடக்குச் சித்திரை வீதி, ஸ்ரீரங்கம்

சித்தூர், செங்கல்பட்டு, வட ஆர்காடு, திருநெல்வேலி ஆகிய ஜில்லாக்களுக்கும், ஹைதராபாத், மைசூர் சமஸ்தானங்கள், இலங்கை ஆகிய இடங்களுக்கும் ஏஜண்டுகளாக விரும்புவோர் எழுதவும்.

---

# சரசபரில்லா



உற்சாகத்தையும்
ஆரோக்யத்தையும்
கொடுக்கும்
சிறந்த ஓர்
குளிர்ந்த பானம்



**டி.எஸ்.ஆர் & கோ**

**கும்பகோணம்**

மதராஸ் ஏஜண்டு :

[illegible] ஸ்டோர்ஸ்

பைகிராப்ட்ஸ் ரோடு

திருவல்லிக்கேணி :: மதராஸ்

கோவை, நீலகிரி, ஜில்லாக்கள் பாலக்காடுக்கு ஏஜண்டு :

B. [illegible]

வைசியாள் தெரு, கோயமுத்தூர்

3 பொக்கிஷங்கள்




குழந்தைகளுக்கு முக்கியமானது

# பேபி கிரைப்




மிகச் சிறந்த
ரத்த சுத்தி மருந்து

# அயோடிசால்




# ஸைபால்

எல்லாக் கடைகளிலும் கிடைக்கும்

தயாரிப்பவர்கள்:
**தி சௌத் இந்தியன் மானுபாக்சரிங் கம்பெனி**
மதுரை

ஏஜண்டுகள்:

ராஜன் புக் ஸ்டோர்ஸ், நைனியப்ப நாய்க்கன் தெரு, மதராஸ்-3; சீதாராமா ஜெனரல் ஸ்டோர்ஸ், பெஜவாடா, பேர்ஹாம்பூர் சிகந்திராபாத்; கிரீஜா மெடிகல் ஸ்டோர்ஸ், பெங்களூர் ஸிடி.

சிலோன் ஏஜண்டுகள்:

M. O. A. கனி & கோ., 96, சதாம்ஸ் ரோடு, கோட்டை, கொழும்பு

# தி இந்தியன் பாங்க்

## லிமிடெட்

●

தலைமை ஆபீஸ்:

"இந்தியன் பாங்க் பில்டிங்ஸ்"
வடக்கு பீச் ரோடு, மதராஸ்

●

லோகல் ஆபீஸ்:

எஸ்பிளனேட், திருவல்லிக்கேணி, மவுண்டு ரோடு, மயிலாப்பூர், தியாகராயநகர், புரசவாக்கம், எழும்பூர்

சென்னை மாகாணத்தில் எல்லா முக்கியமான இடங்களிலும் பம்பாயிலும் பிராஞ்சுகளும் சப் ஆபீஸ்களும் உள்ளன.

●

| | |
|---|---|
| வழங்கி வாக்களிக்கப்பட்ட மூலதனம் | ரூ. 72,00,000 |
| செலுத்தப்பட்ட மூலதனம் | ரூ. 63,00,000 |
| ரிசர்வ் நிதி | ரூ. 62,00,000 |

●

சகலவிதமான பாங்க் அலுவல்களும் நடத்தப்படும். மற்ற விவரங்களுக்குப் பாங்கியின் எந்த ஆபீஸுக்காவது எழுதி தெரிந்து கொள்ளலாம்.

**N. கோபால அய்யர்**
செக்ரடரி

REGD. No M. 4392




ராஜா

ஸ்னோ

ஹேர்ஆயில்

கஸ்தூரிசோப்









FAS-10

MANYAM & CO., BANGALORE * MADRAS * BOMBAY *

பம்பாய் ஆபீஸ்: 142, ஒக்டு மோடி ஸ்ட்ரீட், போர்ட். இலங்கைக்கு சோலேஜண்ட்கள்:
மெஸர்ஸ். துரை, அருள் & கோ., லிட்., 83, கேய்ஸர் தெரு, கொழும்பு